# ஆர்த்திப்ரபந்தம்

## தனியன்கள்

தேன்பயிலும் தாரான் எதிராசன்சேவடிமேல்
தான்பரம பத்தி தலையெடுத்து—மாந்தர்க்கு
உணவாகஆர்த்தியுடன் ஒண்தமிழ்கள்செய்தான்
மணவாளமாமுனிவன் வந்து.

வம்பவிழ்தார் வண்மை மணவாளமாமுனிகள்
அம்புவியில்கால்பொருந்தா ஆர்த்தியினல்—உம்பர்தொழும்
விண்ணுலகிற்செல்ல விரைந் ததிராசன்பதங்கள்
நண்ணி யுரைத்தார் நமக்கு.

---

*வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழியெதி ராசனென வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார்வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை. 1

இராமாநுசாய நமவென்று சிந்தித்து
இராமாநுசரோடு இறைப்போழ்து—இராமாநு
சிந்திப்பார் தாளிணையில் சேர்ந்திருப்பார்தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள் வாழ்வு. 2

தந்தை நற்றாய்தாரம் தநயர் பெருஞ்செல்வம்
என்தனக்கு நீயே எதிராசா!—இந்த நிலைக்கு
ஏலாத இவ்வுடலை இன்றே அறுத்தருளப்
பாராததென்னோ? பகர். 3

இந்தவுடற் சிறைவிட்டு எப்பொழுது யானேகி
அந்தமில் பேரின்பத்து ளாகுவேன்?—அந்தோ!
இரங்காய் எதிராசா! என்னை இனியுமிக்கை
பாரங்காண்? உனக்கு உணர்ந்துபார். 4

தன்புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால்
இன்புறுமோ தந்தை எதிராசா!—உன்புதல்வன்
அன்றோயான்? உரையாய் ஆதலால் உன்போகம்
நன்றோ? எனை ஒழிந்த நாள்! 5

வேம்புமுற்றக் கைப்பு மிகுவதுபோல் வெவ்வினையேன்
தீம்புமுற்றும் தேகமுற்றிச் செல்லுங்கால்—ஆம்பரிசால்
ஏற்கவே சிந்தித்து எதிராசா! இவ்வுடலைத்
தீர்க்கவே யான வழி செய். 6

அன்னை குடிநீரருந்தி முலை யுண்குழவி
தன்னுடைய நோயைத்தவிராளோ—என்னே
எனக்கா எதிராசா! எல்லாம் நீசெய்தால்
உனக்கது தாழ்வோ? உரை. 7

தன்குழவி வான்கிணற்றைச் சார்ந்திருக்கக் கண்டிருந்தாள்
என்பதன்றோ அன்னைபழி யேற்கின்றாள்—நன்குணரில்
என்னாலே யென்னாச மேலும் எதிராசா
உன்னாலே யாமுறவை யோர். 8

கூபத்தில் வீழும் குழவி யுடன்குதித்துஅவ்
வாபத்தை நீக்கும்அந்த வன்னைபோல்—பாபத்தால்
யான்பிறப்பேனேலும் இனியெந்தை எதிராசன்
தான்பிறக்குமென்னை யுய்ப்பதா. 9

பூமகள்கோன் தென்னரங்கர் பூங்குழற்குப்பாதுகமாய்த்
தாம் மகிழும் செல்வச் சடகோபர்—தேமலர்த்தாட்கு
ஏய்ந்தினிய பாதுகமாம் எந்தை இராமாநுசனை
வாய்ந்தெனது நெஞ்சமே வாழ். 10

உன்னை யொழிய ஒருதெய்வம் மற்றறியா
மன்னு புகழ்சேர் வடுகநம்பி—தன்னிலையை
என்தனக்கு நீதந்து எதிராசா! எந்நாளும்
உன்தனக்கே யாட்கொள் உகந்து. 11



தேசந் திகழும் திருவாய் மொழிப்பிள்ளை
மாசில் திருமலையாழ்வார் என்னை—நேசத்தால்
எப்படியே எண்ணி நின்பால் சேர்த்தார் எதிராசா!
அப்படியே நீ செய்தருள். 12

எதிராசன் வாழி எதிராசன் வாழி
எதிராசன் வாழியென் றென்றேத்தி—சதிராக
வாழ்வார்கள் தாளிணைக்கீழ் வாழ்வார்கள் பெற்றிடுவர்
ஆழ்வார்கள் தங்க ளருள். 13

அதிகார முண்டேல் அரங்கர் இரங்காரோ?
அதிகார மில்லாதார்க் கன்றோ—எதிராசா!
நீயிரங்க வேண்டுவது நீயும் அதிகாரிகளுக்
கேயிரங்கில் என்செய்வோம் யாம்? 14

எம்பெருமானார் திருவடிகளே சரணம்
என்பதுவே நாவுரைக்கும் இத்தாலென்?—அன்பவர்பால்
இப்போதளவும் யானொன்றும் காண்கின்றிலேன்
எப்போதுண்டாவதினி? 15

ஆகாததீதென்றறிந்தும் பிறர்க்குரைத்தும்
ஆகாததே செய்வதனால்—மோகாந்தன்
என்றுநினைத்து என்னை இகழேல் எதிராசா!
என்று உன்னடிச் சேர்வன் யான்? 16

பொல்லாங்கனைத்தும் பொதிந்துகொண்டு நன்மையிலொன்
றில்லா எனக்கும் எதிராசா!—நல்லார்கள்
நண்ணும் திருநாட்டை நான்தருவனென்றுநீ
தண்ணென்றிருக்கிற தென்தான்? 1

என்றுவிடிவது எனக்கு எந்தாய் எதிராசா?
ஒன்றுமறிகின்றிலேன் உரையாய்—குன்றுமல்
இப்படியே இந்தவுயிர்க்கென்றும் இருளேவிளைக்கும்
இப்பவமாம் நீண்ட இரவு. 18

அல்லும்பகலும் யாளுக்கை வழியுமன்று
செல்லுமது உன் தேசுக்குத் தீங்கன்றோ? — நல்லார்கள்
தந்தனயர் நீசர்க்காட்செய்யச் சகிப்பரோ?
எந்தையெதிராசா! இசை. 19

போம் வழியைத்தருமென்னு மின்பமெல்லாம்
புசித்துவழிபோய் அமுதவிரசையாற்றில்
நாம் மூழ்கி மலமற்றுத் தெளிவிசும்பை
நண்ணிநலந்திகழ் மேனிதன்னைப்பெற்றுத்
தாம் அமரர் வந்தெதிர்கொண்டலங்கரித்துச்
சற்கரிப்ப மாமணி மண்டபத்துச்சென்று
மாமலராள் கோன் மடியில் வைத்துகக்கும்
வாழ்வு நமக்கெதிராசன் அருளும் வாழ்வே. 20

திருமலையாழ்வார் திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால்
தருமதி கொண்டுஅவர்தம்மை உத்தாரகராக எண்ணி
இருமனமே அவர்க்கா எதிராசர் எமைக்கடுகப்
பரமபதம் தன்னிலேற்றுவர் என்னபயம் நமக்கே? 21

தீதற்ற ஞானத்திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தை மாற்றும் எதிராசர்தம் அபிமானமென்னும்
போதத்தை ஏறிப்பவமாம் புணரி தனைக்கடந்து
கோதற்ற மாதவன் பாதக்கரையைக் குறுகுவனே. 22

அடியார்கள் குழாங்கள் அழகோலக்க மிருக்க
ஆநந்த மயமான மாமணி மண்டபத்து
படியாதுமில் படுக்கையா யிருக்கும் அநந்தன்
பணமணிகள் தம்மின்ஒளி மண்டலத் தினிடையில்
வடிவாரும் மாமலராள் வலவருகும் மற்றை
மண்மகளும் ஆய்மகளும் இடவருகும் இருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நான் அனுபவிக்கும்வகை நல்கு என் எதிராசா! 23

இந்தவுடல் விட்டு இரவிமண்டலத்தூடேகி
இவ்வண்டம் கழித்து இடையிலாவரணமேழ்போய்
அந்தமில்பாழ் கடந்து அழகார் விரசைதனில் குளித்து அங்கு
அமானவனால் ஒளிக்கொண்ட சோதியும்பெற்று அமரர்

வந்தெதிர்கொண்டலங்கரித்து வாழ்த்தி வழிநடத்தி
வைகுந்தம்புக்கு மாமணிமண்டபத்துச்சென்று
நம் திருமாலடியார்கள் குழாங்களுடன் கூடும்
நாளெனக்குக் குறுகும்வகை நல்கு என் எதிராசா! 24

என்று நிரேதுகமாக என்னை அபிமானித்து
யானுமறிந்து உனக்கே யாயிருக்கும் வகை செய்தாய்
அன்றுமுதல் இன்றளவும் அநவரதம் பிழையே
அடுத்தடுத்துச் செய்வது அநுதவிப்பது இனிச்செய்யேன்
என்றுஉன்னைவந்திரப்பதாம் என்கொடுமை கண்டும்
இகழாதே இரவுபகல் அடிமைகொண்டுபோந்தாய்
இன்று திருநாடும் எனக்கருள எண்ணுகின்றாய்
இனிக்கடுகச் செய்தருளவேண்டும் எதிராசா! 25

தென்னரங்கர்தமக்காமோ? தேவியர்கட்காமோ?
சேனையர்கோன் முதலான சூரியர்கட்காமோ?
மன்னியசீர்மாறன் அருள்மாரி தனக்காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்குமாமோ?
என்னுடைய பிழைபொறுக்க யாவருக்குமுடியும்?
எதிராசா! உனக்கன்றி யாரொருவர்க்காகேன்
உன்னருளால் எனக்கு ருசிதன்னையும் உண்டாக்கி
ஒளிவிசும்பில் அடியேனை யொருப்படுத்து விரைந்தே. 26

இவ்வுலகில் இனியொன்றும் எண்ணாதேநெஞ்சே!
இரவுபகல் எதிராசர் எமக்கினிமேலருளும்
அவ்வுலகை அலர்மகள்கோன் அங்கிருக்கு மிருப்பை
அடியார்கள் குழாங்கள்தமை அவர்களநுபவத்தை
இவ்வுயிரும் அதுக்கிட்டுப்பிறந்து இழந்துகிடந்த
தென்னுமத்தை என்றும் அதுக்கிடைச்சுவராய்க் கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல்விடும் பொழுதை விட்டால்
விளையுமின்பம்தன்னை முற்றும் விடாமல் இருந்தெண்ணே. 27

பண்டுபலவாரியரும் பாருலகோருய்யப்
பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மை
கண்டதெல்லாம் எழுதியவை கற்றிருந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்தும் காலத்தைக் கழித்தேன்
புண்டரிகை கேள்வனுறை பொன்னுலகுதன்னில்
போகநினைவொன்றுமின்றிப் பொருந்தி இங்கேயிருந்தேன்
எண்திசையுமேத்தும் எதிராசனருளாலே
எழில்விசும்பையன்றி இப்போதென் மனமெண்ணாதே. 28

சாறுவாகமதம் நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக்கடலை வற்றுவித்து மிகுசாங்கியக்கிரி முறித்திட
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்து அறமிகுத்துமேல்
வந்தபாசுபதர்சிந்தி ஓடும்வகை வாதுசெய்த எதிராசனார்

கூறும் மாகுருமதத்தொடு ஓங்கிய குமாரிலன் மதம் வயிற்றின்மேல்
கொடியதர்க்கசரம் விட்டபின் குறுகி மாயவாதியரை வென்றிட
மீறிவாதில் வரு பாற்கரன் மதவிலக்கடிக்கொடி எறிந்துபோய்
மிக்கயாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளும் மிகவாழியே. 29

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி
ஏராரும் செய்யவடி வெப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல் வாழி இணைத்தோள்கள் வாழி
சோராதுய்ய செய்யமுகச் சோதிவாழி
தூமுறுவல் வாழி துணைமலர்க்கண்கள் வாழி
ஈராறு திருநாமமணிந்த எழில்வாழி
இனிதிருப்போடெழில் ஞானமுத்திரை வாழியே. 30

அறுசமயச் செடியதனை அடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிர்ட்டிகளை அறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத்தீர்த்து விட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வம்முற்றும் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுறை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறம்மிகு நற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே. 31

சங்கர பாற்கார யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம்
சாய்வுற வாதியர்மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையென்று மிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமையாறு மெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளிபராங்குச முன்னவர் வாழ்வுமுளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல் வாவிகள்சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமான் இளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே. 32

இன்னம் எத்தனைகாலம் இந்தவுடம்புடன் யானிருப்பேன்?
இன்னபொழுது உடம்புவிடும் இன்னபடியதுதான்
இன்னவிடத் தேயதுவும் என்னுமிவை எல்லாம்
எதிராசா! நீயறிதி யானிவையொன்றறியேன்
என்னை இனி இவ்வுடம்பை விடுவித்து உன்னருளால்
ஏராரும் வைகுந்தத்தேற்ற நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென்? பேசாய்
பேதைமைதீர்த்து என்னை அடிமைகொண்ட பெருமானே! 33

முன்னைவினை பின்னைவினை பிராரத்தமென்று
மூன்றுவகையான வினைதொகையனைத்தும் யானே
என்னையடைந்தோர் தமக்குக் கழிப்பனென்னுமரங்கர்
எதிராசா! நீயிட்ட வழக்கன்றோ? சொல்லாய்
உன்னையல்ல தறியாத யான் இந்தவுடம்போடு
உழன்று வினைப்பயன் புசிக்கவேண்டுவதொன்றுண்டோ?
என்னுடைய இருவினையை இறைப்பொழுதில் மாற்றி
ஏராரும் வைகுந்தத் தேற்றிவிடாய் நீயே. 34

அருளாலே அடியேனை அபிமானித்தருளி
அநவரதம் அடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலே புலன் போக வாஞ்சை செயும் என்தன்
வல்வினையை மாற்றி உன்பால் மனம் வைக்கப்பண்ணுய
தெருளாரும் கூரத்தாழ்வானும் அவர் செல்வத்
திருமகனுர் தாமும் அருளிச்செய்த தீமைத்
திரளானதித்தனையும் சேரவுள்ளவென்னைத்
திருத்தியுய்யக் கொள்ளும்வகை தேரும் எதிராசா? 35

வாசனையி லூற்றமோ? மாளாத வல்வினையோ?
ஏதென்ற றியேன் எதிராசா!—தீதாகும்
ஐம்புலனிலாசை அடியேன் மனந்தன்னை
வன்புடனே தானடரும் வந்து. 36

இன்றளவு மில்லா அதிகாரம் மேலும்எனக்கு
என்றுளதாம் சொல்லாய் எதிராசா! குன்ரு
வினைத்தொடரை வெட்டிவிட்டு மேலைவைகுந்தத்து
எனைக்கடுக ஏற்ருத தென்? 37

அஞ்சில் அறியாதார் ஐம்பதிலும் தாமறியார்
என்சொல் எனக்கோ? எதிராசா!—நெஞ்சம்
உனதா ளொழிந்தவற்றையே உகக்க இன்றும்
அநுதாப மற்றிருக்கை யால். 38

வேம்பு கறியாக விரும்பினுர் கைத்ததென்று
தாம்புகடாதே புசிக்கும் தன்மைபோல்—தீம்பனிவன்
என்று நினைத்து என்னைஇகழார் எதிராசர்
அன்றறிந்தங் கீகரிக்கையால் 39

அவத்தே பொழுதை அடியேன் கழித்து இப்
பவத்தே இருக்குமது பண்போ? — திவத்தேயான்
சேரும் வகைஅருளாய் சீரெதிராசா!
போருமினி இவ்வுடம்பைப் போக்கு. 40

எனைப்போல் பிழை செய்வார் இவ்வுலகி லுண்டோ?
உனைப்போல் பொறுக்கவல்லார் உண்டோ?— அனைத்துலகும்
வாழப்பிறந்த எதிராச மாமுனிவா!
ஏழைக் கிரங்கா யினி. 41

ஐம்புலன்கள் மேலிட்டடரும் பொழுது அடியேன்
உன்பதங்கள் தம்மை நினைந்தோலமிட்டால்-பின்பவைதாம்
என்னை யடராமல் இரங்காய் எதிராசா!
உன்னையல்லா தார் எனக் குண்டோ? 42

இந்த வுலகிற் பொருந்தாமை ஏதுமில்லை
அந்த வுலகிற்போக ஆசையில்லை—இந்நமக்கு
எப்படியே தான் தருவார்! எந்தை எதிராசர்
ஒப்பில் திருநாடு தந்து? 43

மாகாந்த நாரணனார் வைகும் வகையறிந்தோர்க்கு
ஏகாந்த மில்லை இருளில்லை—மோகாந்தர்
இவ்விடமேகாந்தமிருளென்று பயமற்றிருந்து
செய்வார்கள் தாம் பாவத் திறம் 44

நாராயணன் திருமால் நாரம்நாம் என்னுமுறவு
ஆராயில் நெஞ்சே ! அநாதி யன்றோ ?—சீராரும்
ஆசா ரியனாலே யன்றோ நா முய்ந்ததென்று
கூசாமல் எப்பொழுதும் கூறு. 45

திருவாய் மொழிப்பிள்ளை தீவினையோந் தம்மை
குருவாகி வந்து உய்யக் கொண்டு—பொருவில்
மதிதா னளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே !
எதிராசர்க்கு ஆளானோம் யாம். 46

இராமாநுசாயநமவென்று இரவும் பகலும் சிந்தித்து
இராமாநுசர்கள் இருப்பிடந்தன்னில் இறைப்பொழுதும்
இராமாநுசர் அவர்க்கு எல்லாவடிமையும் செய்ய வெண்ணி
இராமாநுசரை மாநுசராவென்று கொல் ? எண்ணுவதே ! 47

எண்ணாது என்னெஞ்சம் இசையாது என்நா இறைஞ்சாது சென்னி
கண்ணானவை ஒன்றும் காணலுறா கலியர் நலிய
வொண்ணாதவண்ணம் உலகளித்தோன் எதிராசனடி
நண்ணாதவரை அரங்கேசர் செய்த நலம் நமக்கே. 48

நந்தா நரகத்தழுந்தாமை வேண்டில் நானிலத்தீர் !
எந்தாதையான எதிராசனை நண்ணும் என்றும் அவன்
அந்தாதி தன்னையநு ஸந்தியும் அவன் தொண்டருடன்
சிந்தாகுலம் கெடச் சேர்ந்திருக்கும் முத்திபின்சித்திக்குமே. 49

அவத்தேயருமந்த காலத்தைப்போக்கி அறிவின்மையால் இப்
பவத்தே உழல்கின்ற பாவியர்காள் ! பல காலம் நின்று
தவத்தே முயல்பவர் தங்கட்கும் எய்தவொண்ணாத அந்தத்
திவத்தே உம்மை வைக்கும் சிந்தியும் நீர் எதிராசரென்றே. 50

என்றுளன் ஈசன் உயிருமன்றேயுண்டு இக்காலமெல்லாம்
அன்றளவாகப் பழுதே கழிந்தது இரு வினையால்
என்று இழவின்றி இருக்கும் என்னெஞ்சம் இரவுபகல்
நின்று தபிக்கும் எதிராசா ! நீயருள்செய்தபின்னே. 51

கனக கிரிமேல் கரிய முகில்போல்
வினதை சிறுவன் மேற்கொண்டு—தனுவிடும்போது
ஏரா ரங்கர் எதிராசர்க்காக என்பால்
வாரா முன்னிற்பர் மகிழ்ந்து. 52

இதத்தாலே தென்னரங்கர் செய்கின்ற தென்றறிந்தே
இருந்தாலும் தற்கால வேதனையின் கனத்தால்
பதைத்தாவோ என்னுமிந்தப் பாவவுடம்புடனே
பலநோவும் அநுபவித்துஇப் பவத்திருக்கப் போமோ
மதத்தாலே வல்வினையின்வழியுழன்று திரிந்த
வல்வினையேன் தன்னை உனக் காளாக்கிக் கொண்ட
இதத்தாயும் தந்தையுமாம் எதிராசா ! என்னை
இனிக்கடுக விப்பவத்தி னின்றும்எடுத் தருளே. 53

இன்னமெத்தனைநாள் இவ்வுடம்புடனே
இருந்து நோவுபடக் கடவேனையோ!
என்னை இதினின்றும் விடுவித்து நீர்
என்றுதான் திருநாட்டினுள் ஏற்றுவீர்?
அன்னையுமத்தனும் அல்லாத சுற்றமும்
ஆகி என்னையளித்தருள் நாதனே!
என்னித்தை இராப்பகலின்றியே
ஏகமெண்ணும் எதிராச வள்ளலே! 54

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன் கலையுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுதும் நமக்கவை பொழுபோக்காகப் பெற்றோம்
பின்னையொன்றுதனில் நெஞ்சுபோராமல் பெற்றோம்
பிறர் மினுக்கம்பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே 55

உன்தன் அபிமானமே உத்தாரகமென்று
சிந்தை தெளிந்திருக்கச் செய்தநீ—அந்தோ
எதிராசா! நோய்களால் என்னை நலக்காமல்
சதிராக நின்திருத்தாள் தா. 56

தேசிகர்கள் போற்றும் திருவாய் மொழிப்பிள்ளை
வாசமலர்த் தாளடைந்த வத்துவென்று—நேசத்தால்
என்பிழைகள் காணு எதிராசரே! அடியேன்
புன்பகர்வைக் கேளும் பொறுத்து. 57

எந்தை திருவாய் மொழிப்பிள்ளை இன்னருளால்
உன்தன் உறவை உணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லா வுறவும் நீயென்றே எதிராசா!
நில்லாத துண்டோஎன் னெஞ்சு. 58

எந்தை திருவரங்கர் ஏரார்கருடன்மேல்
வந்து முகங்காட்டி வழிநடத்த—சிந்தை செய்திப்
பொல்லாவுடம்புதன்னைப் போக்குவதென்னுள் கொலோ?
சொல்லாய் எதிராசா! சூழ்ந்து? 59

இந்த வரங்கத் தினிதிருநீ என்றரங்கர்
எந்தை எதிராசர்க்கீந்தவரம்—சிந்தை செய்யில்
நம்மதன்றோ? நெஞ்சமே! நற்றாதை சொம்புதல்வர்
தம்மதன்றோ? தாயமுறைதான். 60

ஜீயர் திருவடிகளே சரணம்

ஆகவித்தால் உபயவிபூதி ஐச்வர்யத்தையும் பெரிய பெருமாளாலே பெற்று உடையவராய் அத்தால் "ஸ்ரீவிஷ்ணு லோக மணிமண்டப மார்க்தாயி" யாய், ப்ரபன்னஜன கூடஸ்தராய் இருக்கிற எம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாக யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணி யருளின ப்ராப்யப்ரார்த்தனை அவர் அபிமானாந்தர்ப்பூதர் எல்லாருக்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று, நித்யவிபூதியிலே நிரந்தர பகவதநுபவ கைங்கர்ய நிரதராய் வாழப் பெறுவர்கள் என்ற அர்த்தஞ்சொல்லித் தலைக்கட்டிற்றாயிற்று.

(இவை பின்னைலோகம் ஜீயருடைய வியாக்யானத்தில் முடிவான பங்க்திகள்)

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# உபதேசரத்தின மாலை

## என்னும் திவ்யப்ரபந்தத்தில் எம்பெருமானார் விஷயமான பாசுரங்கள்

***

### சித்திரையில் திருவாதிரைத் திருநாளின் சிறப்பு. *

இன்றுலகீர் ! சித்திரையில் ஏய்ந்த திருவாதிரைநாள்
என்றையினும் இன்றிதனுக்கேற்றமென்தான் ?—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம் பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள். (27)

### இதுவுமது.

ஆழ்வார்கள்தாங்கள் அவதரித்தநாள்களிலும்
வாழ்வானநாள் நமக்கு மண்ணுலகீர்!—ஏழ்பாரும்
உய்ய எதிராசருதித்தருளும் சித்திரையில்
செய்யதிருவாதிரை (28)



### இதுவுமது.

எந்தை எதிராசர் இவ்வுலகில் எந்தமக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால்—இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனை நெஞ்சே !
ஒருவாமல் எப்பொழுதும் ஓர் ! (29)

### எதிராசர் திருவருளின் பெருமை.

ஓராண்வழியாய் உபதேசித்தார் முன்னோர்
ஏராரெதிராசர் இன்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று
பேசி வரம்பறுத்தார் பின்.

### எம்பெருமானார் தரிசனம் என்ற பெயருக்கு அடி.

எம்பெருமானார் தரிசனமென்றே இதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத்தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச்செயல் அறிகைக்கா.

---

* உடையவர் வருஷத்திருநக்ஷத்திரத்தில் 27, 28, 29 பாசுரங்கள் சாற்றுமுறையாக அநுஸந்திக்குமவையாகும்.

# உடையவர் வாழி திருநாமம்

## அப்பிள்ளை அருளிச்செய்தது *

அத்திகிரி அருளாளர் அடிபணிந்தோன் வாழியே
அருட்கச்சி நம்பியுரை ஆறுபெற்றோன் வாழியே

பத்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே
பதின்மர் கலை யுட்பொருளை பரிந்துகற்றான் வாழியே

சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே
தொல்பெரிய நம்பிசரண் தோன்றினான் வாழியே

சித்திரையில் ஆதிரைநாள் சிறக்கவந்தோன் வாழியே
சீர்ப்பெரும்பூதூர் முனிவன் திருவடிகள் வாழியே.

## மணவாளமாமுனிகள் அருளிச்செய்தது †



சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி

* * *

இனிதிருப்போடெழில் ஞானமுத்திரை வாழியே (ஆர்த்திப்ரபந்தம்—30 பக். 37)

அறுசமயச்செடியதனை யடியறுத்தான் வாழியே

* * *

அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே (ஆர்த்திப்ரபந்தம்—31 பக். 37)

சங்கரபாக்கரயாதவ பாட்டப்ரபாகரர் தங்கள்மதம்

* * *

சீமானிலையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே (ஆர்த்திப்ரபந்தம்—32 பக். 37)

— X —

ஸ்ரீமந் மஹாபூதபுரே ஸ்ரீமத்கேசவ யஜ்வந ꞉ ।
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் ॥

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

* இந்த வாழி திருநாமம் அதிகமாக வழக்கிலில்லை.

† இந்த மூன்று பாசுரங்களே உடையவர் விஷயமாக அநுஸந்தானத்திலுள்ளவை. ஆர்த்திப்ரபந்தத்தில் பாசுர எண்படி கண்டு ஸேவிக்கவும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# யதிராஜ விம்சதி

### தனியன்

यः स्तुतिं यतिपतिप्रसादिनीं व्याजहार यतिराजविंशतिम् ।
तं प्रपन्नजनचातकाम्बुदं नौमि सौम्यवरयोगिपुङ्गवम् ॥

ய: ஸ்துதிம் யதிபதிப்ரஸாதிநீம் வ்யாஜஹார யதிராஜவிம்சதிம்
தம் ப்ரபந்நஜநசாதகாம்புதம் நௌமி ஸௌம்யவரயோகி புங்கவம்

---

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ॥ 1 ॥

ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜத்வய நித்ய ஸேவா ப்ரேமா விலாशய பராங்குश பாதபக்தம்
காமாதிதோஷ ஹரமாத்மபதாश்ரிதாநாம் ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமிமூர்த்நா 1

श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदाम्बुज भृङ्गराजम् ।
श्रीभट्टनाथपरकालमुखाब्जमित्रं श्रीवत्सचिह्नचरणं यतिराजमीडे ॥ 2 ॥

ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜராஜஹம்ஸம் ஸ்ரீமத் பராங்குश பதாம்புஜ ப்ருங்கராஜம்
ஸ்ரீபட்டநாத பரகால முகாப்ஜமித்ரம் ஸ்ரீவத்ஸசிந்நசரணம் யதிராஜமீடே 2

वाचा यतीन्द्र ! मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम् ।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम् ॥ 3 ॥

வாசா யதீந்த்ர! மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணாம்
கூராதிநாத குருகேशமுகாத்யபும்ஸாம் பாதாநுசிந்தநபரஸ்ஸததம் பவேயம் 3

नित्यं यतीन्द्र ! तव दिव्यवपुस्स्मृतौ मे सक्तं मनो भवतु वाग्गुणकीर्तनेऽसौ ।
कृत्यं च दास्यकरणं तु करद्वयस्य वृत्यन्तरेऽस्तु विमुखं करणत्रयं च ॥ 4 ॥

நித்யம் யதீந்த்ர! தவ திவ்யவபுஸ்ம்ருதௌ மே ஸக்தம் மநோபவதுவாக் குணகீர்த்தநேஸௌ
க்ருத்யம் ச தாஸ்யகரணம் து கரத்வயஸ்ய வ்ருதயந்த்ரேஸ்துவிமுகம் கரணத்ரயஞ்ச 4

अष्टाक्षराख्य मनुराजपदत्रयार्थनिष्ठां ममात्र वितराद्य यतीन्द्र नाथ ! ।
शिष्टाग्रगण्यजनसेव्य भवत्पदाब्जे हृष्टाऽस्तु नित्यमनुभूय ममास्य बुद्धिः ॥ 5 ॥

அஷ்டாக்ஷராக்ய மநுராஜ பதத்ரயார்த்த நிஷ்டாம் மமாத்ர விதராத்ய யதீந்த்ரநாத
शிஷ்டாக்ரகண்யஜநஸேவ்யபவத்பதாப்ஜே ஹ்ருஷ்டாஸ்து நித்யமநுபூய மமாஸ்யபுத்தி! 5

अल्पाऽपि मे न भवदीयपदाब्जभक्तिश्शब्दादिभोगरुचिरन्वहमेधते हा ।
मत्पापमेव हि निदानममुष्य नान्यत्तद्वारयार्य यतिराज! दयैकसिन्धो ! ॥ 6 ॥

அல்பாபி மே ந பவதீயபதாப்ஜ பக்தி। ஶப்தாதிபோகருசிரந்வஹ மேததே ஹா
மத்பாபமேவ ஹி நிதாநமமுஷ்ய நாந்யத் தத்வாரயார்ய யதிராஜ! தயைகஸிந்தோ 6

वृत्त्या पशुर्नरवपुस्त्वहमीदृशोऽपि श्रुत्यादिसिद्धनिखिलात्मगुणाश्रयोऽयम् ।
इत्यादरेण कृतिनोऽपि मिथः प्रवक्तुमद्यापि वञ्चनपरोऽत्र यतीन्द्र ! वर्ते ॥ 7 ॥

வ்ருத்யா பஶுர் நரவபுஸ் த்வஹமீத்ருஶோபி ஶ்ருத்யாதி ஸித்தநிகிலாத்மகுணாஶ்ரயோயம்
இத்யாதரேண க்ருதிநோபி மித। ப்ரவக்தும் அத்யாபி வஞ்சநபரோத்ர யதீந்தர! வர்த்தே 7

दुःखावहोऽहमनिशं तव दुष्टचेष्टश्शब्दादिभोगनिरतश्शरणागताख्यः ।
त्वत्पादभक्त इव शिष्टजनौघमध्ये मिथ्याचरामियतिराज ततोऽस्मि मूर्खः ॥ 8 ॥

து:க்காவஹோஹமநிஶம் தவதுஷ்டசேஷ்டஶ் ஶப்தாதிபோகநிரதஶ் ஶரணாகதாக்ய:
த்வத்பாத பக்த இவ சிஷ்ட ஜநௌகமத்யே மித்த்யா சராமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க। 8

नित्यं त्वहं परिभवामि गुरुं च मन्त्रं तद्देवतामपि न किञ्चिदहो बिभेमि ।
इत्थं शठोऽप्यशठवद्भवदीयसङ्घे धृष्टश्चरामि यतिराज ! ततोऽस्मि मूर्खः ॥ 9 ॥



நித்யம் த்வஹம் பரிபவாமி குருஞ்ச மந்த்ரம் தத்தேவதாமபி நகிஞ்சிதஹோ பிபேமி
இத்தம் ஶடோப்யஶடவத் பவதீயஸங்கே த்ருஷ்டஶ்சராமி யதிர்ராஜ ததோஸ்மி மூர்க்க। 9

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा योऽहं चरामि सततं त्रिविधापचारान् ।
सोऽहं तवाप्रियकरः प्रियकृद्वदेव कालं नयामि यतिराज ! ततोऽस्मि मूर्खः ॥ 10 ॥

ஹா ஹந்த ஹந்த! மநஸா க்ரியயா ச வாசா யோஹம் சராமி ஸததம் த்ரிவிதாபசாராந்
ஸோஹம் தவாப்ரியகர: ப்ரியக்ருத்வதேவ காலம் நயாமி யதிராஜ! ததோஸ்மி மூர்க்க: 10

पापे कृते यदि भवन्ति भयानुतापलज्जाः पुनः करणमस्य कथं घटेत ।
मोहेन मे न भवतीह भयादिलेशस्तस्मात्पुनः पुनरघं यतिराज! कुर्वे ॥ 11 ॥

பாபே க்ருதே யதி பவந்தி பயாநுதாபலஜ்ஜா: புந: கரணமஸ்ய கதம் கடேத
மோஹந மே ந பவதீஹ பயாதிலேஶஸ் தஸ்மாத் புந: புநரகம் யதிராஜ! குர்வே 11

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशमन्धः पुरस्थितमिवाहमवीक्षमाणः ।
कन्दर्पवश्यहृदयस्सततं भवामि हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र ! नार्हः ॥ 12 ॥

அந்தர்பஹிஸ் ஸகலவஸ்துஷு ஸந்தமீசம் அந்த। புரஸ்திதமிவாஹமவீக்ஷமாண:
கந்தர்ப்பவஶ்யஹ்ருதயஸ்ஸததம் பவாமி ஹந்த த்வதக்ரகமநஸ்ய யதீந்த்ர! நார்ஹ: 12

तापत्रयीजनितदुःखनिपातिनोऽपि देहस्थितौ ममरुचिस्तु न तन्निवृत्तौ ।
एतस्य कारणमहो मम पापमेव नाथ ! त्वमेव हर तद्यतिराज! शीघ्रम् ॥ 13 ॥

தாபத்ரயீ ஜநிததுக்க நிபாதிநோபி தேஹஸ்திதௌ மமருசிஸ்து நதந்நிவ்ருத்தௌ
ஏதஸ்யகாரணமஹோ மம பாபமேவ நாத! த்வமேவ ஹர தத் யதிராஜ! சீக்ரம் 13

वाचामगोचरमहागुणदेशिकाग्र्य कूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोहमेव न पुनर्जगतीदृशस्तद्रामानुजार्य! करुणैवतु मद्गतिस्ते ॥ 14 ॥

வாசாமகோசர மஹாகுணதேசிகாக்ர்ய கூராதிநாதகதிதாகில நைச்யபாத்ரம்
ஏஷோஹமேவ ந புநர் ஜகதீத்ருஶஸ் தத் ராமாநுஜார்ய! கருணைவது மத்கதிஸ்தே 14

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथ भट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके तस्माद्यतीन्द्र ! करुणैव तु मद्गतिस्ते ॥ 15 ॥

சுத்தாத்மயாமுந குருத்தம கூரநாத பட்டாக்யதேசிகவரோக்த ஸமஸ்த நைச்யம்
அத்யாஸ்த்யஸங்குசிதமேவ மயீஹலோகே தஸ்மாத் யதீந்த்ர! கருணைவ து மத்கதிஸ்தே 15

शब्दादिभोगविषया रुचिरस्मदीया नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र ! ।
त्वद्दासदासगणना चरमावधौ यस्तद्दासतैकरसताऽविरता ममास्तु ॥ 16 ॥

சப்தாதிபோகவிஷயா ருசிரஸ்மதீயா நஷ்டா பவத்விஹபவத்தயயா யதீந்த்ர!
த்வத்தாஸ தாஸகணநாசரமாவதௌ யஃதத்தாஸதைகரஸாதா அவிரதா மாமஸ்து 16

श्रुत्यग्रवेद्य निजदिव्य गुणस्वरूपः प्रत्यक्षतामुपगतस्त्विह रङ्गराजः ।
वश्यस्सदा भवति ते यतिराज! तस्माच्छक्तस्स्वकीयजनपापविमोचनेत्वम् ॥ 17॥

ச்ருத்யக்ரவேத்யநிஜதிவ்ய குணஸ்வரூப: ப்ரத்யக்ஷதாமுகதஸ்த்விஹ ரங்கராஜ:
வஶ்யஸ்ஸதா பவதி தே யதிராஜ தஸ்மாத் சக்தஸ்வகீயஜந பாபவிமோசநே த்வம் 17

कालत्रयेपि करणत्रयनिर्मितातिपापक्रियस्य शरणं भगवत्क्षमैव ।
सा च त्वयैव कमलारमणेऽर्थिता यत्क्षेमस्सएव हिं यतीन्द्र ! भवच्छ्रितानाम् ॥ 18 ॥

காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி பாபக்ரியஸ்ய ஶரணம் பகவத்க்ஷமைவ
ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத் க்ஷேமஸ்ஸ ஏவ ஹி யதீந்திர! பவச்ச்ரிதாநாம் 18

श्रीमन्तीयन्द्र ! तव दिव्यपदाब्जसेवां श्रीशैलनाथकरुणापरिणामदत्ताम् ।
तामन्वहं मम विवर्धय नाथ ! तस्याः कामं विरुद्धमखिलंच निवर्तयत्वम् ॥ 19 ॥

ஶ்ரீமந்யதீந்த்ர தவதிவ்ய பதாப்ஜஸேவாம் ஶ்ரீசைலநாத கருணாபரிணாமதத்தாம்
தாமந்வஹம் மம விவர்த்தய நாத! தஸ்யா: காமம் விருத்த மகிலஞ்ச நிவர்த்தயத்வம் 19

विज्ञापनं यदिदमद्य तु मामकीनमङ्गीकुरुष्व यतिराज! दयाम्बुराशे! ।
अज्ञोऽयमात्मगुणलेशविवर्जितश्च तस्मादनन्यशरणो भवतीति मत्वा ॥ 20 ॥

விஞ்ஞாபநம் யதிதமத்யது மாமகீநம் அங்கீகுருஷ்வ யதிராஜ! தயாம்புராசே!
அஜ்ஞோயமாத்மகுணலேசவிவர்ஜிதஶ்ச தஸ்மாதநந்ய ஶரணோ பவதீதிமத்வா 20

इति यतिकुलधुर्यमेधमानैःश्रुतिमधुरैरुदितैः प्रहर्षयन्तम् ।
वरवरमुनिमेव चिन्तयन्ती मतिरियमेति निरत्ययं प्रसादम् ॥

இதி யதிகுலதுர்யமேதமாநை: ச்ருதிமதுரைருதிதை ப்ரஹர்ஷயந்தம்
வரவரமுநிமேவ சிந்தயந்தீ மதிரியமேதி நிரத்யயம் ப்ரஸாதம்.

———

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

வேதாந்தாசாரியர் அருளிச்செய்த

# யதிராஜ ஸப்ததி

தனியன்

श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्योमे सन्निदत्तां सदाहृदि ॥

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்ய வர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ॥

---

ஸதாசார்ய உபதேசமுகமாய் எம்பெருமானார் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதிக்ரந்தங்களை அதிகரித்துப் பலமுறை ஸ்ரீபாஷ்யப்ரவசனம் நடத்திச் சாத்திய வேதாந்தாசாரியர் பாஷ்யகாரரான எம்பெருமானாரிடத்தில் தமக்குள்ள பக்திக்குப் போக்கு வீடாக ஸ்வாமியை துதிக்க இழிந்து குருபரம்பராபூர்வமாக பகவத்ராமாநுஜருடையவும் அவர் ஸ்ரீஸூக்திகளுடையவும் ப்ரபாவங்களைப் பரக்கப்பேசி அநுபவிக்க ஆரம்பிக்கிறார்.

कमप्याद्यं गुरुं वन्दे कमलागृहमेदिनम् ।
प्रवक्ताछन्दसां वक्ता पाञ्चरात्रस्य यःस्वयम् ॥

கமப்யாத்யம் குரும் வந்தே கமலா க்ருஹமேதிநம் ।
ப்ரவக்தா ச்சந்தஸாம் வக்தா பஞ்சராத்ரஸ்ய ய: ஸ்வயம் ॥ 1

1. முதல் ஒன்பது ச்லோகங்களில் அடைவே எம்பெருமான், பிராட்டி, ஸேனைமுதலியார், ஆழ்வார், நாதமுனிகள் முதல் பெரியநம்பி வரையிலுள்ள ஆசார்யர்கள் இவர்களை அடிபணிகிறார்.

முதன்முதலில் வேதங்களை வெளிப்படுத்தி ப்ரகாசிப்பித்தவனும் பாஞ்சராத்ர ஆகமத்தை அருளிச்செய்தவனும் "பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து" என்கிறபடியே ப்ரதமாசார்யனும் ச்ரிய:பதியுமான ஸர்வேச்வரனை அடிபணிகிறேன் என்று பகவத் வந்தனம் பண்ணுகிறார்.

सहधर्मचरीं शौरेः सम्मन्त्रितजगद्धिताम् ।
अनुग्रहमयीं वन्दे नित्यमज्ञात निग्रहाम् ॥

ஸஹ தர்மசரீம் ஶௌரே: ஸம்மந்த்ரித ஜகத்திதாம் ।
அநுக்ரஹமயீம் வந்தே நித்ய மஜ்ஞாத நிக்ரஹாம் ॥ 2

2- எப்போதும் எம்பெருமானுடன் ஸகல லோகங்களுடைய க்ஷேமத்தையே நோக்கிக் கொண்டிருப்பவளும், நம்மிடம் நிக்ரஹம் என்பதையே அறியாதவளும், அருளே வடிவெடுத்தவளாய் ஜகத்ரக்ஷணத்தில் பகவானுக்கு ஸஹதர்மசாரிணியுமான பிராட்டியாரை அடிபணிகிறார்.

वन्दे वैकुण्ठ सेनान्यं देवं सूत्रवती सखम् ।
यद्वेत्र शिखरस्पन्दे विश्वमेतद्व्यवस्थितम् ॥

வந்தே வைகுண்ட்ட ஸேநாந்யம் தேவம் ஸூத்ரவதீ ஸகம் ।
யத்வேத்ரஶிகர ஸ்பந்தே விஶ்வமேதத் வ்யவஸ்த்திதம் ॥ 3

3. ஸூத்ரவதி தேவியின் நாயகனான எந்த விஷ்வக்ஸேனரின் பிரம்பின் (செங்கோலின்) ஆஞ்ஞையில் இந்தவுலகம் நிலைநிற்குமோ அந்த ஸேனை முதல்வனை அடிபணிகிறேன் என்கிறார்.

यस्य सारस्वतं स्रोता वकुलामोद वासितम् ।
श्रुतीनां विश्रमायालं शठारिं तमुपास्महे ॥

யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதா வகுளாமோத வாஸிதம் ।
ஶ்ருதீநாம் விஶ்ரமாயாலம் ஶடாரிம் தமுபாஸ்மஹே ॥ 4

4. எந்த நம்மாழ்வாரின் மகிழமலர் மணம்கமழ்கின்ற திவ்யவாக்கின் ப்ரவாஹம் வேதங்களுக்கு இளைப்பார இடமாகுமோ அந்த சடகோபனை அடிபணிகிறேன் என்று ப்ரபன்னஜன கூடஸ்தரான ஆழ்வாரைப் போற்றுகிறார்.

नाथेन मुनिना तेन भवेयं नाथवाहनम् ।
यस्य नैगमिकं तत्वं हस्तामलकतां गतम् ॥

நாதேந முநிநா தேந பவேயம் நாதவாநஹம் ।
யஸ்ய நைகமிகம் தத்வம் ஹஸ்தாமலகதாம் கதம் ॥ 5

5. ஸர்வவேதாந்தங்களின் உட்பொருளான பகவத்தத்வம் எந்த பெரியமுதலியாருக்கு கையிலங்கு நெல்லிக்கனியாக இருக்குமோ அந்த நாதமுனிகளே எனக்கு ஸ்வாமியாயிருந்து என்னையாட்கொள்ள வேணுமென்று நாதமுனியை அடிபணிகிறார்.

नमस्याम्यरविन्दाक्षं नाथभावेव्यवस्थितम् ।
शुद्धसत्वमयं शौरेरवतारमिवापरम् ॥

நமஸ்யாம் யரவிந்தாக்ஷம் நாதபாவே வ்யவஸ்த்திதம் ।
ஶுத்தஸத்வமயம் ஶௌரே: அவதாரமிவாபரம் ॥ 6

6. எப்போதும் பெரியமுதலியாரைச் சிந்தையில் நிலையாகக் கொண்டிருப்பவரும், சுத்த ஸத்வமயனான எம்பெருமானின் அபராவதாரமோ என்று அதிசயிக்கும்படியான ப்ரபாவமுடையவருமான புண்டரீகாக்ஷரை (உய்யக்கொண்டாரை) நமஸ்கரிக்கிறேன் என்கிறார்.

अनुज्झितक्षमायोगमपुण्यजन भाधकम् ।
अस्पृष्टमदरागन्तं रामं तुर्यमुपास्महे ॥

அநுஜ்ஜித க்ஷமா யோகம் அபுண்யஜந பாதகம் ।
அஸ்ப்ருஷ்ட மதராகம் தம் ராமம் துர்ய முபாஸ்மஹே ॥ 7

7. பொறுமைக்குக் கொள்கலமாய் எப்போதும் விளங்குபவரும் ஸாது ஜனப்ரியரும் ராகத்வேஷங்களை வென்றவருமாய் உயர்ந்த வைராக்ய சீலரான ராமமிச்ரரை (மணக்கால் நம்பியை) நமஸ்கரிக்கிறேனென்கிறார்.

विगाहे यामुनं तीर्थं साधुबृन्दावनेस्थितम् ।
निरस्तजिह्मगस्पर्शे यत्र कृष्णः कृतादरः ॥

விகாஹே யாமுநம் தீர்த்தம் ஸாது ப்ருந்தாவநே ஸ்த்திதம் ।
நிரஸ்த ஜிஹ்மக ஸ்பர்சே யத்ர க்ருஷ்ண: க்ருதாதர: ॥ 8

8. தமது சிஷ்யஸமூகமாகிற ஸத்துக்களின் ஆத்மரக்ஷணத்தில் நிலைநின்றவரும், அரங்கனின் (கண்ணனுடைய) பரம ஆதரத்துக்கு பாத்ரமானவனும் விஷயப்ராவண்யமே துளியும் இல்லாதவருமான ஆளவந்தார் (யாமுனர்) என்கிற குளிர்ந்த தடாகத்தில் அமிழ்ந்து களிக்கிறேன் என்கிறார்.

दयानिघ्नं यतीन्द्रस्य देशिकं पूर्णमाश्रये ।
येन विश्वसृजो विष्णोरपूर्यत मनोरथः ॥

தயா நிக்நம் யதீந்த்ரஸ்ய தேசிகம் பூர்ணமாச்ரயே ।
யேந விச்வ ஸ்ருஜோ விஷ்ணோ: அபூர்யத மநோரத: ॥ 9



9. ஜகத்காரணனை புருஷனின் மனோரதம் எந்த பரமதயாளுவால் பூர்த்தி செய்யப்பட்டதோ அந்த பரமாசார்யரான பெரியநம்பிகளை ஆச்ரயிக்கிறேனென்கிறார். (ஆமுதல்வன் இவன் என்று ஆளவந்தாரால் தர்சனப்ரவர்த்தகராகும்படி கடாக்ஷிக்கப்பெற்ற இளையாழ்வாரைக் கொண்டு சேதனோஜ்ஜீவனம் பண்ணுவதாக எம்பெருமான் மனோரதம்-ஸங்கல்பம் செய்தான். இளையாழ்வாரை தர்சனப்ரவர்த்தகராகும்படி பஞ்சஸம்ஸ்காரமுகமாக வாழ்வித்தவர் பூர்ணாசார்யரென்ற பெரியநம்பிகள் என்பது ப்ரஸித்தம்.)

प्रणामं लक्ष्मणमुनिः प्रतिगृह्णातु मामकम् ।
प्रसादयति यत्सूक्तिः स्वाधीनपतिकां श्रुतिम् ॥

ப்ரணாமம் லக்ஷ்மண முநி: ப்ரதிக்ருஹ்ணாது மாமகம் ।
ப்ரஸாதயதி யத்ஸூக்தி: ஸ்வாதீந பதிகாம் ச்ருதிம் ॥ 10

10. இனி எம்பெருமானாரை துதிக்கப்புகுகிறார். பரமபுருஷனைத் தன்னுள் மறைத்து வைத்துக்கொண்டுள்ள வேதமாதுக்கு எந்த ராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யம் முதலான ஸ்ரீஸூக்திகள் அணிகலன்களாகுமோ (ச்ருதியின் பரமார்த்த ப்ரகாசகமாகுமோ) அந்த லக்ஷ்மணமுநி அடியேனுடைய ப்ரணாமத்தை அங்கீகரிக்கவேணும் என்று வேண்டுகிறார்.

उपवीतिनमूर्ध्वपुण्ड्रवन्तं त्रिजगत्पुण्यफलं त्रिदण्डहस्तम् ।
शरणागत सार्थवाहमीडे शिखया शेखरिणं पतिं यतीनाम् ॥

உபவீதிநமூர்த்வ புண்ட்ரவந்தம் த்ரிஜகத் புண்ய பலம் த்ரிதண்ட ஹஸ்தம் ।
சரணாகத ஸார்த்தவாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீநாம் ॥ 11

11. மார்பில் இலங்கிய முந்நூலினாலும் அணிந்த ஈராறு திருநாமங்களினாலும் முக்கோலேந்திய திருக்கையினாலும் தலையில் முடித்திருக்கும் கற்றையினாலும் எழிலுற்று விளங்குபவராய் எல்லாவுலகங்களின் நற்றவப்பயனின் உருவோ என்றதிசயிக்கக் கூடியவரான யதிஸார்வபௌமரைத் துதிக்கப் புகுகிறேன்.

प्रथयन्विमतेषु तीक्ष्णभावं प्रभुरस्मत्परिरक्षणे यतीन्द्रः ।
अपृथक् प्रतिपन्नयन्मयत्वैर्ववृधे पञ्चभिरायुधैर्मुरारेः ॥

ப்ரதயந் விமதேஷு தீக்ஷ்ண பாவம் ப்ரபுரஸ்மத் பரிரக்ஷணே யதீந்த்ர: ।
அப்ருதக் ப்ரதிபந்ந யந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே: ॥ 12

12. ஆச்ரிதர்களின் ரக்ஷணத்திலும் ஆச்ரிதவிரோதிநிரஸனத்திலும் தீக்ஷித்திருப்பதில் ப்ரகாசமுள்ள (எம்பெருமானின்) பஞ்சாயுதாழ்வார்களின் ஸ்வபாவத்தையே (மாறுபடாமல்) கொண்ட யதிராஜரானவர் தம்மைச்சார்ந்த ஜனங்களின் உஜ்ஜீவனத்திலும் பாஹ்யகுத்ருஷ்டிகளின் (வேதத்தைப்ரமாணமாகக்கொண்டு அதற்குத்தகவுற்ற அர்த்தங்களைக் கல்பிப்பவர்-குத்ருஷ்டிகள்) நிரஸனத்திலும் ஸமர்த்தராக விளங்கினார் [அடையார்கமலத்து- ரா. நூ. 33 பாசுரார்த்தத்தை அடியொற்றியது)

शमितोदय शङ्करादिगर्वः स्वबलादुद्धृत यादवप्रकाशः ।
अवरोपितवांश्रुतीरपार्थैन्ननु रामावरजः स एष भूयः ॥



ஶமிதோதய ஶங்கராதி கர்வ : ஸ்வபலாதுத்த்ருத யாதவப்ரகாஶ: ।
அவரோபிதவாந் ஶ்ருதே ரபார்த்தாந் நநு ராமாவரஜ: ஸ ஏஷ பூய: ॥ 13

13. கண்ணனையும் எம்பெருமானாரையும் பொருளாகக்கொண்டு ச்லேடையாக அமைந்த ச்லோகமிது. கண்ணன் (கார்த்திகையானும் கரிமுகத்தானும்.... ரா. நூ 22. பாசுரத்தின்படியே) முக்கண்ணனான சங்கரனின் செறுக்கடக்கியவன்; யதுகுலத்திலுதித்துத் தன் வல்லமையால் யாதவர்களைப் ப்ரகாஶமடையச் செய்தவன்; பார்த்தனின் விரோதிகளைப் பெருமையுறாமல் அழித்தவன்; பலராமனின் தம்பியான (ராமாநுஜனான) கண்ணனே இந்த ராமாநுஜனாக (பாஷ்யகாரராக) அவதரித்தனனோ என்று அதிசயிக்கும்படி இருக்கும். இனி உடையவர், சங்கராதி வேதகுருத்ஷ்டிகளின் செறுக்கைத் தம் ஸ்ரீஸூக்திகளாலும் வாதஸாமர்த்தியத்தாலும் அடக்கியவர்; தம் புத்தி ஸாமர்த்தியத்தாலும் தம் க்ருபாதிசயத்தாலும் முன்பு தமக்கு ஆசார்யனாயிருந்த யாதவப்ரகாசனை வாழ்வித்தவர்; ச்ருதிகளுக்கு பிறர் கல்பித்த அபார்த்தங்களைக் களைந்தொழித்தவர்; இப்படிபபட்ட இந்த ராமாநுசராக அவரோ (அந்த பார்த்தஸாரதியான எம்பெருமானோ!) அவதரித்தார்! என்று அதிசயப்படும்படியுள்ளதுஎன்கிறார்.

अबहुश्रुतसम्भवं श्रुतीनां जरतीनामयथायथप्रचारम् ।
विनिवर्तयितुं यतिश्वरोक्तिर्विदधे ताः स्थिरनीति पञ्जरस्थाः ॥

அபஹுஶ்ருத ஸம்பவம் ஶ்ருதீநாம் ஜரதீநாமயதாயத ப்ரசாரம் ।
விநிவர்த்தயிதும் யதீஶ்வரோக்தி: விததே தா: ஸ்த்திர நீதி பஞ்ஜரஸ்த்தா: ॥ 14

14. எம்பெருமானாருடைய திவ்யஸூக்திகள், அல்பஜ்ஞானம் படைத்த குத்ருஷ்டிகளால் உண்மைக்குப்புறம்பான அர்த்தங்களைப்ப்ரசாரம் பண்ணுவதால் வேதங்களுக்கு ஏற்பட்ட இளைப்பைப்போக்கி அவைகளை மறுக்கவொண்ணாத ந்யாயங்களால் நன்றாக ரக்ஷிக்கப்பட்டவைகளாய் ஆக்கியுள்ளன. (பரமதஸ்தர்களால் மறுக்கவொண்ணாதபடி வேதாந்த விழுப்பொருளை நம் ஸ்வாமி ஸித்தாந்தப்படுத்தியுள்ளார் என்றபடி.)

अमुना तपनातिशायिभूम्ना यतिराजेन निबद्धनायकश्रीः ।
वहतीगुरुपङ्क्तिहारयष्टिः विबुधानांहृदयङ्गमाविभाति ॥

அமுநா தபநாதிஶாயி பூம்நா யதிராஜேந நிபத்த நாயகஶ்ரீ: ।
மஹதீ குரு பங்க்தி ஹார யஷ்டி: விபுதாநாம் ஹ்ருதயங்கமா விபாதி ॥ 15 ।

15. தேஜோவானான ஸூர்யனிலும் விஞ்சிய தேஜஸ்ஸையுடைய நம் ஸ்வாமி எம்பெரு மானார் நாயகரத்னமாக அமைந்துள்ளதால் மிகவும் பெருமையுற்ற இந்த குருபரம்பரை யான ரத்னஹாரமனது மிகவும் பெருமையுடையதாய், தத்வவித்துக்களான வித்வான்களுக்கு சிந்தனைக்கினியதாக விளங்குகிறது.

अलूनपक्षस्य यतिक्ष्माभृतो विभाति वंशे हरितत्वमक्षतम् ।
यदुद्भवाः शुद्धसुवृत्तशीतला भवन्तिमुक्तामयभूषणंभुव : ॥

அலூந பக்ஷஸ்ய யதி க்ஷமாப்ருத: விபாதி வம்ஶே ஹரிதத்வ மக்ஷதம் ।
யதுத்பவா: ஶுத்த ஸுவ்ருத்த ஶீதளா: பவந்தி முக்தாமய பூஷணம் புவ: ॥ 16

16. புறச்சமயிகளால் கண்டிக்க இயலாதனவையாய் விளங்கும் எம்பெருமானார் தர்சனமாகிற பரதத்வமானது (ஸமஸ்த கல்யாண குணங்களோடும் திவ்யமங்கள விக்ரஹத் தோடும்)வெட்டிக்களையப்படாத இறகுகளையுடைய பர்வதம்போல் ஸுரக்ஷிதமாக விளங்கு கிறது. இந்த ஸம்ப்ரதாயஸ்தர்களான மஹான்கள் ஸத்துக்களாகவும் குளிர்ந்த இதயம் படைத் தவர்களாகவும் பூமிக்கே அணிகலன்களாகவுமுள்ளனர். (மலைகளும் ஒரு காலத்தில் சிறகுடையவைகளாயிருந்தமை ஸ்ரீராமாயணத்தில் மைநாகவிருத்தாந்தத்தினால் ப்ரஸித்தம்)

अनपायविष्णुपदसंश्रयं भजे कलयाकयाऽपिघलयाऽप्यनुज्झितम् ।
अकलङ्कयोगमजडाशयोदयं यतिराजचन्द्रमुपरागदूरगम् ॥

அநபாய விஷ்ணுபத ஸம்ஶ்ரயம் பஜே கலயா கயாऽபி கலயாऽப்யநுஜ்ஜிதம் ।
அகளங்க யோக மஜடாஶயோதயம் யதிராஜ சந்த்ர முபராக தூரகம் ॥ 17

17. சந்திரன் கண்ணுக்கு இனியவனாகையால் எம்பெருமானாரை சந்திரனுக்கு ஒப் பிட்டுப் பேசுகிறார். வானத்தில் தோற்றும் சந்திரன் களங்கமுள்ளவன்; உபராகத்துக்கு (க்ரஹணத்துக்கு) உட்பட்டவன்; ஆனால் நம் ஸ்வாமியிடத்தில் ஒரு தோஷத்துக்கும் ப்ரஸக்தி இல்லை. ஸகலவித்யைகளையும் பூர்ணமாக அதிகரித்தவரும் தோஷமற்றவரும் மகான்கள் மனதில் ஸதா ப்ரகாசிப்பவரும், ராகத்வேஷாதிகளுக்குப் புறம்பானவரும் (உபராகத்துக்கு உட்படாதவருமான) யதிராஜ சந்திரனை உபாஸிக்கிறேன்.

अभिगम्य सम्यगनघाः सुमेधसः यतिचक्रवर्ति पदपद्मपत्तनम् ।
हरिभक्तदास्यरसिकाः परस्परं क्रयविक्रयार्हदशयासमिन्धते ॥

அபிகம்ய ஸம்யகநகா: ஸுமேதஸ: யதி சக்ரவர்த்தி பத பத்ம பத்தநம் ।
ஹரி பக்த தாஸ்ய ரஸிகா: பரஸ்பரம் க்ரய விக்ரயார்ஹ தஶயா ஸமிந்ததே ॥ 18

18. ராமாநுஜரின் அவதாரப்ரயோஜனத்தைச் சொல்லுகிறார். முன்பு மந்தமதிகளாக வும், நற்சரித்திரமில்லாதவர்களாகவும் இருந்தவர் *அண்ணலிராமானுசன் வந்து தோன்றிய

அப்பொழுதே நண்ணரும் ஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே (ரா. நூ.) என்கிற படியே நல்லபுத்தியுடையவர்களாய், குற்றமற்றவர்களாய், எம்பெருமானார் திருவடிகளாகிற திவ்ய நகரத்தையடைந்து, பாகவதப் பண்பில் நிலைபெற்று ஒருவருக்கொருவர் விற்கவும் வாங்கவும் ஆம்படி விளங்குகின்றனர்.

परुषातिवादपरिवाद पैशुनप्रभृति प्रभूतपतनीय पङ्किला ।
स्वदतेममाद्यसुभगा सरस्वती यतिराजकीर्तिकतकैर्विशोधिता ॥

பருஷாதிவாத பரிவாத பைஶுந ப்ரப்ருதி ப்ரபூத பதநீய பங்கிலா ।
ஸ்வததே மமாத்ய ஸுபகா ஸரஸ்வதீ யதிராஜ கீர்த்தி கதகைர் விஶோதிதா ॥ 19

19. அப்படி உலகத்தவர் திருந்தியமைக்குத் தாமே எடுத்துக்காட்டு என்கிறார். முன்பு அடியேனுடைய வாக்கானது கொடுமை நிறைந்து, பிறரைப்பழித்தல், கோள் சொல்லல், அதிவாதம்பண்ணுதல் இவைகளால் தூய்மையற்றதாய் சேறுபோல கலக்கமுற்றிருந்தது. உடையவரைப்பற்றியபின், ஸ்வாமியின் ப்ரபாவமாகிற தேத்தாங்கொட்டையினால் தெளிவிக்கப்பட்டு, அழகாய் யாவருக்கும் ருசிக்கும்படி அமைந்தது. (தேத்தாங்கொட்டையை கலங்கிய நீரில் இட்டு வைத்தால் வண்டல் அடியில் படிந்து நீர் தெளிந்துவிடுவது ப்ரஸித்தம்.)

अनुकल्पभूत मुरभित्पदं सतां अजहत्त्रिवर्ग मपवर्गवैभवम् ।

चलचित्तवृत्ति विनिवर्तनौषधं शरणं यतीन्द्रचरणौ वृणीमहे ॥

அநுகல்ப பூத முரபித் பதம் ஸதாம் அஜஹத் த்ரிவர்க்க மபவர்க்க வைபவம் ।
சல சித்த வ்ருத்தி விநிவர்த்தநௌஷதம் ஶரணம் யதீந்த்ர சரணௌ வ்ருணீமஹே ॥ 20

20. இப்படித் தமக்கு வாழ்ச்சியளித்த எம்பெருமானார் திருவடிகளில் அத்திருவடிகளின் ப்ரபாவத்தை வாயாறப்பேசிச் சரணம் புகுகிறார். ஸத்துக்களுக்கு இத்திருவடிகள் 'பகவச்சரணாரவிந்தமும் இதற்கடுத்தபடியே" என்னும்படி பரமப்ராப்யமாயிருக்கும். *குலந்தரும் என்கிறவிடத்தில் சொல்கிறபடி பெருநிலமளிக்கும்; எல்லாந்தந்திடும்; நிலையில் நில்லாத என் பாவி நெஞ்சத்தைத் தன்னிடம் நிலை நிறுத்தும் மருந்தாகும்; இப்படிப்பட்ட திவ்யசரணாரவிந்தங்களைப் புகலாகப் பெற்றேன் என்று ப்ரீதராகிறார். [திருநாரயணபுரத்தில் சோமாசியாண்டான் என்ற பக்தர் செல்வப்பிள்ளையிடம் பேரன்பு பூண்டவர். இவர் பாட, எம்பெருமான் ஆட, இவர் ஸேவித்துக்களிப்பர். ஒரு ஸமயம் உடையவர் இவரை அழைத்து, தமக்கு மோக்ஷம் உண்டோ என்று பெருமாளிடம் கேட்டுச் சொல்லும்படி வேண்ட, அவரும் கேட்க, பெருமான், "மோக்ஷஸாம்ராஜ்யம் நம்பிராமாநுசனிட்ட வழக்காயிருக்க, அவருக்குப் பேற்றில் என்ன ஸந்தேஹம்?" என்றான். அதைக்கேட்ட ஸ்வாமி, உமக்கு மோக்ஷம் உண்டோ என்று கேட்டுச் சொல்லும் என்று நியமிக்க, இவரும் கேட்க, கிடைத்த பதில்: "உமது ஸுக்ருதபலம்—நீர்பாட, நீர்களிப்புறும்படி நான் ஆடிக்காட்டுகிறேன். உடையவர் தந்தாலுண்டு உமக்குப்பேறு. நானெப்படிச் சொல்ல முடியும்?" என்பது. ஆண்டானும் அதுமுதல் எம்பெருமானார் திருவடிகளில் அத்யந்த ப்ராவண்யமுடையவராய் ஆதிதேவுமற்றறியேன் என்கிற நிலைபெற்று ஸ்வாமி கைங்கர்யத்தில் ஈடுபாடுள்ளவராய் ஆனார். "எம்பெருமானார்" என்று சோமாசியாண்டான் பாவபந்தத்துடன் சொல்வது, பட்டர் "நம்பெருமாள்" என்று சொல்வதையொக்கும் என்பர் பெரியோர்.]

श्वसितावधूत परवादिवैभवाः निगमान्तनीति जलधेस्तलस्पृशः ।
प्रतिवादयन्ति गतिमापवर्गिकीं यतिसार्वभौम पदसात्कृताशया ॥

ஶ்வஸிதாவதூத பரவாதி வைபவா: நிகமாந்தநீதி ஜலதேஸ் தல ஸ்ப்ருஶ: ।
ப்ரதிவாதயந்தி கதி மாபவர்கிகீம் யதி ஸார்வபௌம பதஸாத் க்ருதாஶயா: ॥ 21

21. இப்படிப் பெருமை வாய்ந்த யதிராஜ திவ்யசரணாரவிந்தத்தை ஆச்ரயித்தவர்கள் பெருமையைச் சொல்லுகிறார். * அன்று ஆரணச்சொல் கடல் கொண்ட ஒண்பொருள் கண்டளிப்ப (ரா. நூ.) என்னும்படி வேதமாகிய கடலின் அடியில் சென்று ஸூக்ஷ்மமான அர்த்தங்களையும் தெரிந்து தெளியச் சொல்லக்கூடியவர்கள் இவர்கள். இவர்களுடைய "ஹூம்" என்ற மூச்சுக் காற்றாலேயே ப்ரதிவாதிகளுடைய ஸகல வைபவங்களையும் அழிக்கக்கூடியவர்கள். (இவர்கள் முன்பு ப்ரதிபக்ஷிகள் நிற்கமுடியாது என்றபடி). யதிராஜருடைய திருவடிகளில் நிலைக்கப்பெற்ற மனதுடைய இவர்கள் தாங்களே மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையளிக்க வல்லவர்கள் என்கிறார்.

मूलेनिविश्य महतां निगमद्रुमाणां मुष्णन् प्रतारक भयं धृतनैकदण्डः ।
रङ्गेशभक्तजनमानसराजहंसो रामानुजश्शरणमस्तुमुनिः स्वयन्नः ॥

மூலே நிவிஶ்ய மஹதாம் நிகம த்ருமாணாம் முஷ்ணந் ப்ரதாரக பயம் த்ருத நைகதண்ட: ।
ரங்கேஶ பக்தஜந மாநஸ ராஜஹம்ஸ: ராமாநுஜ: ஶரணமஸ்து முநி: ஸ்வயம் ந: ॥ 22

22. இப்படி யதிஸார்வபௌமரை ஆச்ரயித்தவர்களின் பெருமை சொல்லி உடையவரை (மறுபடி) சரணம் பற்றுகிறார். பரந்து கிடக்கும் வேதமாகிற பெரிய மரத்தின் நிழலில் கையில் முக்கோலேந்தி அமர்ந்து, வஞ்சனையுள்ள குத்ருஷ்டிகளாலுண்டான பயத்தைப் போக்கடிப்பவரும், ஸ்ரீரங்கநாதனின் அடியார்களின் மனமாகிற தடாகத்தில் ராஜஹம்ஸம் போல ஸஞ்சரிப்பவருமான எம்பெருமானாரே அடியேனுக்குப் புகலாகவேணும் என்கிறார்.

सन्मन्त्र वित्क्षिपति संयमिनां नरेन्द्रः संसार जिह्मगमुखैः समुपस्थितन्नः ।
विष्वक्ततं विषयलोभविषं निजाभिर्गाढानुभाव गरुडध्वज भावनाभिः ॥

ஸந்மந்த்ரவித் க்ஷிபதி ஸம்யமிநாம் நரேந்த்ர: ஸம்ஸார ஜிஹ்மகமுகை: ஸமுபஸ்த்திதம் ந: ।
விஷ்வக் ததம் விஷய லோப விஷம் நிஜாபி காடா நுபாவ கருடத்வஜ பாவநாபி: ॥ 23

23. எம்பெருமானாரைப் புகலாகப்பற்றினமையால் அவரநுக்ரஹத்தால் விஷயப்ராவண்யமற்றவனானேன் என்கிறார். ஸதாசார்ய உபதேச முகமாய் நன்மந்த்ரங்களை (நலந்தரும் சொல்லான திருமந்திரம் முதலியவைகளை) நன்கறிந்தவரும், யோகியர் தலைவராய் விளங்குவரும் நிரதிசயப்ரபாவமுடையவருமான நம் ஸ்வாமி எம்பெருமானார், ஸம்ஸாரமாகிற விஷப்பாம்பு மூலம் வந்ததும் நம்முன் முழுவதும் (நம்முடலில் பூராவும் பரவியுள்ள) சூழ்ந்திருப்பதுமான விஷயப்ராவண்யம் என்கிற விஷத்தை புட்கொடியனை எம்பெருமானநுக்ரஹங்கொண்டு போக்கடிக்கிறார்.

नाथस्सएषयमिनां नखरश्मि जालैरन्तिर्निलीनमपनीय तमो मदीयम् ।
विज्ञानचित्रमनघंलिखतीवचित्ते व्याख्यानकेलिरसिकेन कराम्बुजेन ॥

நாத: ஸ ஏஷ யமிநாம் நகரஶ்மி ஜாலை: அந்தர்நிலீந மபநீய தமோ மதீயம் ।
விஜ்ஞாந சித்ரமநகம் லிகதீவ சித்தே வ்யாக்க்யாந கேளி ரஸிகேந கராம்புஜேந ॥ 24

24. * எந்தன் மெய்வினைநோய் களைந்தனன் என்றார் கீழே; களைந்து நன்ஞானமளித்தனன் (ரா.நூ.) என்று போற்றுகிறார் இங்கு. யோகீந்த்ரரான எம்பெருமானார் என்னுள்ளே மறைந்து நிரம்பியுள்ள அஜ்ஞானவிருளைப் போக்கடித்து—என்னைத் தீமனங்கெடுத்து, மருவித் தொழும் மனமே தந்து—தம் திருக்கைத் தாமரைகளாலே, வ்யாக்யானசைலிகளை ரஸித்துப் போற்றக்கூடிய என் உள்ளத்திலே நன்ஞானமாகிற சித்திரத்தை எழுதுகிறார் போலும்.

उद्गृणतीमुपनिषत्सु निगूढमर्थं चित्ते निवेशयितुमल्पधियां स्वयन्नः ।
पश्येम लक्ष्मणमुनेः प्रतिपन्नहस्ता मुन्निद्रपद्मसुभगा मुपदेशमुद्राम् ॥

உத்க்ருஹ்ணதீ முபநிஷத்ஸு நிகூடமர்த்தம் சித்தே நிவேஶயிதுமல்ப தியாம் ஸ்வயம்ந: ।
பஶ்யேம லக்ஷ்மண முநே! ப்ரதிபந்ந ஹஸ்தாம் உந்நித்ர பத்ம ஸுபகாமுபதேஶ முத்ராம் 25

25. "இனிதிருப்போடெழில் ஞானமுத்திரை வாழியே!" என்கிறபடியே ஞானப்ரதராய் எழுந்தருளியுள்ள யதிராஜரை ஸாக்ஷாத்கரித்து மேலும் அநுபவித்து மகிழ்கிறார். உபநிஷத்துக்களில் மறைந்துள்ள பொருள்களை மந்தமதிகளான நம்முடைய மனதில் பதிய வைப்பதற்காக, உயர்ந்திருப்பதும், அலர்ந்த தாமரை மலர்போல மனதுக்கினியதாய் நமக்குப்ராப்தமான உபதேச முத்திரையுடைய திருக்கைகளை ஸேவித்துக்களிக்கிறோம்.

आकर्षणानि निगमान्तसरस्वतीना मुच्चाटनानि बहिरन्तरुपप्लवानाम् ।
पथ्यानि घोर भवसंज्वरपीडितानां हृद्यानि भान्ति यतिराजमुनेर्वचांसि ॥

ஆகர்ஷணானி நிகமாந்த ஸ்ரஸ்வதீநாம் உச்சாடநாதி பஹிரந்த ருபப்லவாநாம் ।
பத்த்யாநி கோர பவ ஸம்ஜ்வர பீடிதாநாம் ஹ்ருத்யாநி பாந்தி யதிராஜமுநேர் வசாம்ஸி ॥ 26

26. ஞானமுத்திரையை கீழிரண்டு ச்லோகங்களில் வர்ணித்தார். இனி ஸ்வாமி திருவாய் மலர்ந்தருளும் வாக்ய சைலிகளைப் போற்றுகிறார். எம்பெருமானாருடைய உபதேச பரம்பரைகள் வேதாந்த வாக்யங்களுக்கு மகிழ்ச்சியுண்டு பண்ணுவையாயும், பாஹ்யகுத்ருஷ்டிகளை மாளப்பண்ணுவதாய், ஸம்ஸாரமான பெருநோய்க்கு சமனம் பண்ணும் பத்யங்களாய் மனதில்கொண்டு போற்றும்படியான நிதிகளாய் விளங்குகின்றன.

शीतस्वभावसुभगानुभवः शिखावान् दोषापमर्द नियतोन्नतिरोषधीशः ।
तापानुबन्धशमनस्तपनः प्रजानां रामानुजो जयति संवलितत्रिधामा ॥

ஶீத ஸ்வபாவ ஸுபகாநுபவ: ஶிகாவாந் தோஷாபமர்த நியதோந்நதி ரோஷதீஶ: ।
தாபாநுபந்தஶமநஸ் தபந: ப்ரஜாநாம் ராமாநுஜோ ஜயதி ஸம்வலித த்ரிதாமா ॥ 27

27. உபதேச வாக்யச்ரேணியில் ஈடுபட்டவர் மேலே ஸ்வாமி திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல் விளங்குவதைக் கொண்டாடுகிறார். ப்ரபாவத்தில் (பாபங்களை எரித்து நம்மைத் தூய்மையாக்குவதில்) அக்நியாக இருப்பவரும், (இருப்பினும்) இனிதான குளிர்ந்த ஸ்வபாவத்தால் தோஷங்களை (அஜ்ஞானமான இருளை) போக்கடிப்பதில் நியதமான மஹிமையுடைய சந்த்ரனாக இருப்பவரும், ஆத்யாத்மிகாதி தாபங்களின் ஸம்பந்தத்தை ஒழிப்பதில் சூர்யன் போன்றவரும், இப்படி ஒருங்கே சேர்ந்துள்ள மூவ்வொளிகளையுடைய எம்பெருமானாருக்குப் பல்லாண்டு.

जयति सकलविद्यावाहिनीजन्मशैलो जनियथपरिवृत्तिश्रान्त विश्रान्तिशाखी ।
निखिलकुमतिमाया शर्वरीबालसूर्यो निगमजलधिवेलापूर्णचन्द्रो यतीन्द्रः ॥

ஜயதி ஸகலவித்யா வாஹிநீ ஜந்ம ஶைலோ
ஜநி பத பரிவ்ருத்தி ஶ்ராந்த விஶ்ராந்தி ஶாகீ ।
நிகில குமதி மாயா ஶர்வரீ பாலஸூர்ய:
நிகம ஜலதி வேலா பூர்ண சந்த்ரோ யதீந்த்ர ։ ॥ 28

28. ஸ்வாமியின் தேஜஸ்ஸை துதித்து மகிழ்ந்தார் கீழே. மேலே அவருடைய ஸகல வித்யா வைதுஷ்யத்தையும், குத்ருஷ்டி நிரஸன ஸாமர்த்யத்தையும் புகழ்கிறார். எல்லா வித்யைகளாகிற நதிகளுக்கும் தோற்றுவாயான உயர்ந்த மலை போன்றவரும் ஸம்ஸாரமாகிற நெடுவழியில் தொடர்ந்து நடந்ததால் வந்த களைப்பைப் போக்கும் நிழல் தரும் மரம் போன்றவரும், எல்லாகுத்ருஷ்டிகளின் ப்ரமமாகிற இருளைப்போக்கடிக்கும் பாலஸூர்யன் போன்றவரும் வேதமாகிற கடல் நீர் (களித்துப்) பொங்குவதற்கு முழுநிலவுபோலிருப்பவருமான யதிராஜருக்குப் பல்லாண்டு.

मुनिबहुमतसारा मुक्तिनिश्रेणिकेयं सहृदयहृदयानां शाश्वतीदिष्टसिद्धिः ।
शमितदुरितगन्धा संयमीन्द्रस्यसूक्तिः परिचितगहना नःप्रस्नुवीतप्रसादम् ॥

முநி பஹுமத ஸாரா முக்தி நிஶ்ரேணிகேயம்
ஸஹ்ருதய ஹ்ருதயாநாம் ஶாஶ்வதீ திஷ்ட ஸித்தி ।।
ஶமித துரித கந்தா ஸம்யமீந்த்ரஸ்ய ஸூக்தி :
பரிசித கஹநா ந: ப்ரஸ்நுவீத ப்ரஸாதம் ॥ 29

29. எம்பெருமானாரின் ஸகல வித்யாபாரங்கத்தைப் பேசினவர், மேலே ஸ்வாமியுடைய ஸ்ரீஸூக்திகள் தமக்கு அநுக்ரஹம் பண்ணவேண்டுமென வேண்டுகிறார். பராங்குச, பரகால, நாத, யாமுந முனிவர்களாலே அருளப்பட்ட ஸாரமான அர்த்தங்களை உட்கொண்டவைகளும், பரமபதத்துக்கு படிக்கட்டு போன்றதும் ஸத்துக்களுடைய மனதில் நித்யமான ஆனந்தம் பொங்கச் செய்பவைகளும், ப்ரதிபக்ஷிகளால் உண்டாகும் துக்கத்தைப் போக்குபவைகளும், அநுபவிக்கப் பரமகம்பீரமாயிருப்பவைகளுமான ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யாதி ஸ்ரீஸூக்திகள் அடியேனுக்கு அநுக்ரஹம் பண்ணவேண்டும் (நன்றாக விளங்கவேண்டுமென்றபடி).

भवमरुपरिखिन्नस्फीतपानीयसिन्धुर्दुरितरहितजिह्वादुग्धकुल्यासकुल्या ।
श्रुतिनयन सनाभिः शोभतेलक्ष्मणोक्तिर्नरकमथन सेवास्वादनाडिंधमानः ॥

பவமரு பரிகிந்ந ஸ்பீத பாநீய ஸிந்து ।
துரித ரஹித ஜிஹ்வா துக்த குல்யா ஸகுல்யா ।
ஶ்ருதி நயந ஸநாபி: ஶோபதே லக்ஷ்மணோக்தி ।
நரக மதந ஸேவாஸ்வாதநாடிந்தமா ந: ॥ 30

30. ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளின் பெருமைகளை மேலும் பேசி ப்ரீதராகிறார். வேதார்த்தங்களை ஸரியாக பார்ப்பதற்கு (அறிவதற்கு) கண்களாக இருப்பவைகளான ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திகள் ஸம்ஸாரமாகிற பாலைவனத்தில் அலைந்து மிகவும் களைத்தவர்களுக்கு (தாபஹரமாக) பருக இனிதான தீர்த்தமுள்ள நதிபோன்றவைகளும், பாபமற்ற மஹான்களுக்குப் பால்போல் நாவுக்கு இனிதானவைகளும், நரகாஸுரனை முடித்த எம்பெருமானுடைய குணாநுப

வத்தை ஆநந்தாவஹமாகச் செய்வதுமாக விளங்குகின்றன. [எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதி பூர்த்தியை ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளில் பரக்க அருளிச் செய்கையாலே, இவை ஆநந்தஜநகமான நாடி விஷயத்தைத் தட்டுமவையாக இருக்கும்]

हरिपद्मकरन्द स्यन्दिनः संश्रितानामनुगतबहुशाखास्तापमुन्मूलयन्ति ।
शमितदुरितगन्धाः संयमीन्द्रप्रबन्धाः कथकजनमनीषा कल्पनाकल्पवृक्षाः ॥

ஹரிபத மகரந்த ஸ்யந்திந: ஸம்ஶ்ரிதாநாம்
அநுகத பஹுஶாகாஸ் தாபமுந்மூலயந்தி ।
ஶமித துரித கந்தா: ஸம்யமீந்த்ர ப்ரபந்தா :
கதக ஜந மநீஷா கல்பநா கல்ப வ்ருக்ஷா: ॥ 31

31. மேலும் சொல்லுகிறார்: தன்னைக் கிட்டினவர்களை பகவச்சரணாரவிந்தங்கள் ஸர்வ பாபங்களையும் போக்கி, தேனே, பாலே, கன்னலே, அமுதே என்று மிக போக்யங்களாயிருக்குமாபோலே, ஸகல வேதங்களையும் அநுஸரித்து (ஸமந்வயப்படுத்தி) அவதரித்த ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திகள், (இவைகளை) அப்யஸிப்பவர்களுக்கு ஸகல பாபங்களையும் போக்குபவையான அர்த்தங்களைச் சுரப்பதால் உபபாதனம் பண்ணுகிறவர்களுக்கு கல்பகவ்ருக்ஷத்தைப் போல் தாபங்களை போக்கடிக்கும்.



नानाभूतैर्जगति समयैर्नर्मलीलां विधित्सोरन्त्यं वर्णं प्रथयति विभोरादिमव्यूह भेदे ।
विश्वं त्रातु विषयनियतं व्यञ्जितानुग्रहस्सन् विष्वक्सेनो यतिपतिरभूत् वेत्रसारस्त्रिदण्डः ॥

நாநாபூதைர் ஜகதி ஸமயைர் நர்ம லீலாம் விதித்ஸோ :
அந்த்யம் வர்ணம் ப்ரதயதி விபோராதிம வ்யூஹ பேதே ।
விஶ்வம் த்ராதும் விஷய நியதம் வ்யஞ்ஜிதாநுக்ரஹ: ஸந்
விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட : ॥ 32

32. எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகள் இனியவை, மஹோபகாரம் செய்பவை என்றார் கீழே. எம்பெருமானார் சேனைமுதலியார் அவதாரமாக வந்து பிறந்து மஹோபகாரத்தைச் செய்தார் என்கிறார். பல மதங்களை ஸ்ருஷ்டித்து பரிஹாஸமானதொரு விளையாட்டை விளையாடுவதாக வ்யூஹமூர்த்தியான வாஸுதேவன் கள்ள வேடங்கொண்டு உருப்பட்டபோது விஷயப்ரவணராயிருக்கிற ஸம்ஸாரிகள் இந்த மதங்களைப்பற்றி நாசமடையக்கூடாது என்ற க்ருபையாலே சேனை முதலியார் எம்பெருமானாராக அவதரித்தார். அவர் கைப்பிரம்பு (செங்கோல்) த்ரிதண்டமாயிற்று. (கபில மதம், பௌத்தமதம் இவை ஜனங்களை மயக்குகைக்காக பகவதவதாரமான கபிலர், புத்தர் இவர்களால் உண்டாக்கப்பட்டவை. இங்கு இவை பகவானுடைய பரிஹாஸலீலை என்றும் அவன் கள்ள வேடங்கொண்டு இந்த மதங்களையுண்டு பண்ணியது ஸாதுபரித்ராணத்துக்காகத்தான். எம்பெருமானார் திருவனந்தாழ்வானுடைய அவதாரம் என்பது ப்ரஸித்தம். எம்பெருமானுடைய அவதாரமாகவும், சேனை முதலியாருடைய அவதாரமாகவும், பஞ்சாயுதாழ்வார்களுடைய அவதாரமாகவும் ஸ்வாமி போற்றப்படுகிறார். இதனால் விரோதம் ஒன்றுமில்லை.]

लक्ष्यं बुद्धेरसिकरसना लास्यलीलानिदानं मुग्धास्वादं किमपि जनति श्रोत्रविद्वेषघस्मः ।
लक्ष्यालक्ष्यैः सितजलधिवद्भाति तात्पर्यरत्नैर्लक्ष्मीकान्तस्फुटकमुकुरो लक्ष्मणार्योपदेशः ॥

லக்ஷ்யம் புத்தே ரஸிக ரஸநா லாஸ்ய லீலா நிதாநம்
ஶாஸ்த்ராஸ்வாதம் கிமபி ஜகதி ஶ்ரோத்ர திவ்யௌஷதம் ந: ।
லக்ஷ்யாலக்ஷ்யை: ஸித ஜலதிவத் பாதி தாத்பர்ய ரத்நை:
லக்ஷ்மீகாந்த ஸ்ப்படிக முகுரோ லக்ஷ்மணார்யோபதேஶ: ॥ 33

33. இப்படி அவதரித்துள்ள எம்பெருமானாருடைய உபதேசங்களின் பெருமையை உபபாதிக்கிறார். தெளியச் சொல்லப்பட்டவைகளாகையால் புத்தியில் எளிதாகப்படியும்படியுள்ளவை; அப்படிப்படிந்தவருக்கு மேலும் மேலும் வாசிக்கவும், சொல்ல நாவு துடிக்கும்படியும் உள்ளவை; வாசித்தால் வாசிப்பவனுக்கு ஆநந்தத்தை உண்டாக்குபவை; கேட்பவனுக்கு பரமௌஷதமாயிருப்பவை; (இன்பம் விளைவிப்பவை) ஸர்வேச்வரனைக் கண்ணாடிபோல் காட்டித்தருமவை; இத்தன்மைகள் சார்ந்த எம்பெருமானாரின் உபதேசக்ரந்தங்கள், (கடலில்) எளிதில் கண்டெடுக்கக்கூடியவைகளும் (இப்படி சில), காணக்கூடாததுமான (ஆழ்ந்து நோக்கியே அறியத்தக்கவை-இப்படி சில) தாத்பர்யங்களான ரத்னங்கள் நிரம்பிய கடல்போல் விளங்குகின்றன.

स्थितिमवधीरयन्त्यतिमनोरथसिद्धिमतीं यतिपतिसंप्रदाय निरपायधनोपचिताः ।
मधुकरमौलिदघ्नमददन्तुरदन्तिघटाकरटकटाहवाहिघनशीकरशीभरिताम् ॥

ஸ்த்திதி மவதீரயந்த் யதிமநோரதஸித்திமதீம்
யதிபதி ஸம்ப்ரதாய நிரபாய தநோபசிதா : ।
மதுகர மௌளி தக்ந மத தந்துர தந்தி கடா-
கரட கடாஹ வாஹி கந ஶீகர ஶீபரிதாம் ॥ 34

34. எம்பெருமானார் தர்சனம் என்ற மாசற்ற தனத்தைப்பற்றி அதனால் பெருமையுற்றவர்கள் "யானைகள் கட்டி வாழ்தல்" ஆகிற பெரும் ஐச்வர்யத்தைப்பெற நேர்ந்தாலும் அந்த ஐச்வர்யத்தைச் சிறிதளவும் மதிக்கமாட்டார்கள். த்ருணீக்ருத விரிஞ்சாதி....என்ற பூர்வர்கள் முக்தகம் இங்கு ஸ்மரிக்க உரியது.

निरुपधिरङ्गवृत्तिरसिकानभिताण्डवयन्निगमविमर्शकेलिरसिकैर्निभृतैर्विधृतः ।
गुणपरिणद्धसूक्ति दृढकोणविघट्टनयारटति दिशामुखेषु यतिराजयशःपटहः ॥

நிருபதி ரங்கவ்ருத்தி ரஸிகாநபிதாண்டவயந்
நிகம விமர்ஶகேளி ரஸிகைர் நிப்ருதைர் வித்ருத: ।
குண பரிணத்த ஸூக்தி த்ருடகோண விகட்டநயா
ரடதி திஶாமுகேஷு யதிராஜ யஶ: படஹ: ॥ 35

35. ஸ்ரீபாஷ்யகாரருடைய ப்ரபாவத்தை இங்கு சமத்காரமாக உபபாதிக்கிறார் யதிராஜ யசஸ்ஸாகிற படஹமானது (பறைபோன்ற வாத்ய விசேஷம்) வேதாந்த விசாரமாகிற விளையாட்டில் ரஸிகர்களால், பொருள்செறிந்த திவ்யஸூக்திகளாகிற தண்டத்தால் (வாத்யத்தைத் தட்டி ஒலியெழுப்ப உதவும் கொம்பால்) தட்டப்பட்டு, ஸ்ரீரங்கவாஸிகளான ரஸிகர்களைத் தாமாகவே களிநடம் புரியச்செய்து ஒலிக்கிறது.

स्वंप्रथमसंभवत्कुमति जालकुलङ्कषा मृषामतविषानलज्वलित जीवजीवातवः ।
क्षरन्त्यमृतमक्षरं यतिपुरन्दरस्योक्तयः चिरन्तनसरस्वतीचिकुरबन्धसैरन्ध्रिकाः ॥

இதம் ப்ரதம ஸம்பவத் குமதி ஜால கூலங்கஷா:
ம்ருஷா மத விஷாநல ஜ்வலித ஜீவ ஜீவாதவ : ।
க்ஷரந்த் யம்ருத மக்ஷரம் யதி புரந்தரஸ்யோக்தய :
சிரந்தந ஸரஸ்வதீ சிகுர பந்த ஸைரந்த்ரிகா : ॥ 36

36 ஸ்ரீஸூக்தி ப்ரபாவங்களை மேலும் எடுத்துரைக்கிறார். மிகவும் ப்ராசீனமான வைதிக தர்சனத்தை உபபாதிக்கும் யதீந்த்ரருடைய திவ்யஸூக்திகள், வேதத்துக்குப்புறம்பான, மிகவும் பிற்பட்ட காலத்திலுண்டான குமதிகளுடைய மதங்களை நசிக்கப்பண்ணியும், மாயாவாதமாகிற விஷாக்னியால் தாபிக்கும் ஆத்மாக்களுக்கு ஜீவாதுவாயிருந்து கொண்டும், (உயிர்ப்பிக்கும் மருந்து) வேதமாதின் அளகபாரமான உபநிஷத்துக்களை சிக்குவிடுத்து அழகாகப் பின்னும் ஸைரந்த்ரிகையாகைபாகப் பணிசெய்தும், நித்யமான மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையளிக்கின்றன.

सुधाशनसुदुर्ग्रहश्रुतिसमष्टिमुष्टिंधयः कथाहवमसौ गतान्कपटसौगतान्खण्डयन् ।
मुनिर्मनसिलक्ष्मणोमुदमुदञ्चयत्यञ्जसा मुकुन्दगुणमौक्तिकप्रकरशुक्तिभिः सूक्तिभिः ॥

ஸுதாசந ஸுதுர்க்ரஹ ச்ருதி ஸமஷ்டி முஷ்டிந்தய :
கதாஹவமஸௌ கதாந் கபட ஸௌகதாந் கண்டயந் ।
முநிர்மநஸி லக்ஷ்மணோ முதமுதஞ்சயத்யஞ்ஜஸா
முகுந்த குண மௌக்திக ப்ரகர சுக்திபி: ஸூக்திபி : ॥ 37



37. இந்தச்லோகமும் எம்பெருமானார் ஸ்ரீஸூக்திவைபவபரமே. ஸமஸ்தகல்யாண குணாத்மகன் பகவான் என்று ஸ்தாபிப்பதால் பகவத் குணங்களான முத்துக்களுக்கு இவர் ஸ்ரீஸூக்திகள் முத்துச்சிப்பிபோல் உள்ளன. அமுதமுண்ணும் தேவதைகளுக்கும் நிலமில்லாத மறைகளின் உட்பொருளை கையிலங்கு நெல்லிக்கனியாகக்கண்டு கொண்டுள்ள ஸ்வாமி கபடர்களான பௌத்தர் அத்வைதிகள் இவர்களைத்தம் ஸ்ரீஸூக்திகளால் கண்டித்து நம் மனதில் ஆனந்தத்தை வளரச்செய்கிறார்.

कपर्दिमतकर्दमं कपिलकल्पनावागुरां दुरत्ययमतीत्य तद्द्रुहिणतन्त्रमन्त्रोदरम् ।
कुदृष्टिकुहनामुखे निपततः परब्रह्मणः करग्रह विचक्षणो जयतिलक्ष्मणोऽयंमुनिः ॥

கபர்தி மத கர்தமம் கபில கல்பநா வாகுராம்
துரத்யய மதீத்ய தத் த்ருஹிண தந்த்ர மந்த்ரோதரம் ।
குத்ருஷ்டி குஹநா முகே நிபதத : பரப்ரஹ்மண :
கர க்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோ யம் முநி : ॥ 38

38. பரம்பொருளான புருஷோத்தமனைப் பல பெரிய ஆபத்துக்களினின்றும் ரக்ஷித்தருளினவர் எம்பெருமானார் என்கிறார். "பரை: பரிபவ: ப்ராப்தே மத தீநா தவஸ்திதி:" என்றாராம் ஒருவித்வான் எம்பெருமானைப் பார்த்து. கடக்க அரிதான சைவம் என்கிற சேற்றைக்கடந்து ஸாங்க்யருடைய அப்ராமாணிகமான மதமாகிற வலையிலிருந்து தப்பி, த்ருஹிணமதமான (யோக மதம் என்பதும் இதுவே) சுழலும் யந்த்ரத்தின் மத்யத்தையும் தாண்டி குத்ருஷ்டிகளான மாயாவாதி (அத்வைதி) யுடைய குகைவாயிலில் விழுந்து கொண்டிருந்த பரப்ரஹ்மமான எம்பெருமானைக் கைகொடுத்து ஆபத்தினின்றும் விடுவிக்கும் ஸாமர்த்யம் வாய்ந்த இந்த லக்ஷ்மண முனி (ராமாநுஜர்) ப்ரகாசிக்கிறார். (விஜயஸ்ரீயோடு விளங்குகிறார்).

கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்* என்றதும் ஸ்வாமிக்கு மிகப் பொருத்தம். செங்கல்பொடிக்கூறை *காஷாயேண க்ருஹீத பீதவஸநா* என்று ஸப்ததியில் போற்றப்பட்ட திவ்ய மூர்த்தி. வெண்பல் *அச்யுத பதாம்புஜ யுக்மருக்மவ்யா மோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே* என்னும்படி மஹாவிரக்த் ஸார்வபௌமராகையாலே "யத் தஸ்மை திஷ்டதேந்ய: க்ருபண மசரணோ தர்சயந் தந்தபங்க்தீ" என்னும்படி பிறர்பாடே பல்லைக்காட்டப் பெருதவர். தவத் தவர்—மம, மம என்னாதே 'தவ, தவ' என்று சேஷத்வம் பரிமளிக்க நிற்பவர். தங்கள் திருககோயில்—அமுதனாருடைய ஆதீனத்திலிருந்த கோயில் தங்கள் திருக்கோயிலென்னும்படி தம்மதீனமாகப் பெற்றவர். சங்கிடுவான்—'சங்க:' என்ற வடமொழியும் சங்கு எனத் திரியும். இச்சொல் திறவுகோல் என்னும் பொருளைத் தரும். ஆருயிரப்படியில் இப்பொருளும் பணிக்கப் பெற்றது. ஆழ்வான் மூலமாகத் திருக்கோயில் திறவுகோலைப் பெற்ற இதிஹாஸம் இச்சொற்றொடரில் அநுஸந்திக்கலாகிறது. ... ... ... *

## 15. எல்லே பிளாய்கிளியே

இப் பாட்டில் "உனக்கென்ன வேறுடையை" என்னுஞ் சொற்றொடர் நிதியானது. உமக்கு மட்டும் அஸாதாரணமான பெருமை என்னே! என்று வியந்து கூறப்பட்டுள்ளது. ஸ்வாமிக்கு முன்னே நம்மாழ்வாரும் ஸ்ரீமந்நாத முனிகளும் ஆளவந்தாரும் நம் தர்சனத்திற்கு நிர்வாஹகர்களாயிருக்கச் செய்தேயும் 'நம்மாழ்வார் தரிசனம்' என்றோ, 'நாத முனிகள் தரிசனம்' என்றோ 'ஆளவந்தார் தரிசனம்' என்றோ வ்யவஹாரம் வாராமே 'எம்பெருமானார் தரிசனம்' என்றே வ்யவஹாரம் நிகழ்ந்துவருகைக் கீடான ஸ்வாமியின் அஸாதாரணமான பெருமை இங்கு அநுஸந்திக்க வுரியது. மாற்றாரை மாற்றழிக்க வல்லானென்ற விடத்தில்—"பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹநச் சார்வாக சைலாசநி: பௌத்த த்வாந்தநிராஸ வாஸரபதிர் ஜைநேப கண்டீரவ:, மாயாவாதி புஜங்கபங்க கருட:" *தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும்......நீசரும் மாண்டனர்* "சாறுவாகமத நீறுசெய்து" இத்யாதிகள் நினைவுக்குவரும்.

## 16. நாயகனாய் நின்ற நந்தகோபன்

முன்பே விரித்துரைக்கப்பட்டது. அங்கே கண்டு கொள்வது. (பக்கம் 5.)

## 17. அம்பரமே தண்ணீரே

அம்பரத்தையும் தண்ணீரையும் சோற்றையும் அறம் செய்தவர் ஸ்வாமி. "அம்பரம் வ்யோம வஸ்த்ரயோ:" என்ற நிகண்டின்படி அம்பரமாவது ஆகாசம்; பரமாகாசமெனப்படுகிற பரமபதம். அதையும், விரஜையாகிற தண்ணீரையும், *அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்* என்று உபநிஷத்தில் அன்னமாகச் சொல்லப்பட்ட பரப்ரஹ்மாநுபவத்தையும், அறஞ்செய்யுமெம் பெருமான்—க்ருபாபாத்ரப்ரஸந்நாசார்யராய் உபகரித்தருளினவர் எம்பெருமானார். மேலே "அம்பர மூடறுத்து ஓங்கியுலகளந்த வும்பர் கோமான்" என்றதும் எம்பெருமானாரை நன்கு நினைவூட்டும். ஆளவந்தாருடைய சரம திருமேனியை ஸ்வாமி ஸேவிக்கப் பெற்றபோது "ஆளவந்தாரோடே நான் சேர்ந்து வாழப் பெறில் பரமபதத்திற்குப் படிகட்டியிருப்பேனே!" என்று ஸ்வாமி பணித்ததாக ப்ரஸித்தி. ஆளவந்தாரோடே சேர்ந்து வாழப் பெறமற் போனாலும் *யத்பதாம்போருஹத்யாந ச்லோகப்படியும் "ஏகலவ்யனன்றோ நான்" என்ற ஸூக்திப்படியும் அவருடைய விலக்ஷணாநுக்ரஹபாத்ரமாயிருக்கப்பெற்ற பெருமையினால் நித்யவிபூதிக்கும் லீலா விபூதிக்கும் இடைச் சுவர் தள்ளி உபய விபூதியையும் ஒரு போகி யாக்கினவர் நம் ஸ்வாமியென்று ப்ரஸித்தமாயிற்று. "மதுரகவி சொன்ன சொல் நம்புவார்பதி வைகுந்தங் காண்மினே" என்ற விடத்து வியாக்கியானத்தில் உபய விபூதிக்கும் இடைச்சுவர் தள்ளின பெருமை பட்டருடையதாக அருளிச் செய்யப்பட்டிருந்தாலும் அப்பெருமை ஸ்வாமிக்கு கிம்புநர்ந்யாய ஸித்தமே. அம்பரத்தை....பரமாகாசத்தை, ஊடறுத்தவர் என்றதாயிற்று.

## 18 உந்துமதகளிற்றன்

இப்பாசுரம் மூலமாகவே ஸ்வாமிக்குத் திருப்பாவை ஜீயரென்று வ்யபதேச முண்டாயிற்றென்று ப்ரஸித்தமாதலால் இங்கு நாம் வேறு எதுவும் விவரிக்கவேண்டிற்றில்லை. ஆனாலும் கீழும் மேலுமுள்ள விவரணங்களுக்குச் சேர இங்குமொன்றுரைப்போம். கந்தங்கமழுங்குழலீ ! என்று கேச பாசத்தை யிட்டுச் சொன்னது ஸ்வாமியின் திருவுள்ளத்திற்கு மிகவுகப்பான ஸம்போதனமாம். மதாந்தரஸ்தர்களான யதிகள் சிகையை வஹியாது முண்டனம் செய்து போருவர்கள்; அங்ஙனன்றிக்கே "காரிசுதன் கழல் சூடிய முடியும் கன நற்சிகை முடியும்" என்றும் "கமநீய சிகாநிவேசம்" என்றும் "சிகயா சேகரிணம் பதிம்யதீநாம்" என்றும் நம் முதலிகள் உள் குழைந்து பேசும்படி கமநீய சிகாபந்தத்தோடு ஸ்வாமிஸேவை ஸாதித்தவழகு நெஞ்சுகுளிர அநுபவிக்கப்பட்டதாயிற்று. ... ... ... ... *

## 19 குத்து விளக்கெரிய

திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே எம்பெருமானுர் பதினெட்டு பர்யாயம் எழுந்தருளி ரஹஸ்யார்த்த விசேஷம் பெற்று அவ்விடத்திலேயே அதைச் சிலர்க்கு உபதேசித்தருளின இதிஹாஸம் இப்பாட்டில் நன்கு ஸூசிதமாகிறது. தோரண விளக்கு, குத்துவிளக்கு என்று இருவிளக்குண்டு. தோரணவிளக்கு ஸ்தாவரமாயிருக்கும். குத்துவிளக்கு ஜங்கமமாயிருக்கும். ஸ்வஸ்தானத்திலேயே ஸ்தாவரராகவிருந்த திருக்கோட்டியூர் நம்பி தோரண விளக்காவர். பலகால கதாகதம் செய்தருளின எம்பெருமானுர் குத்துவிளக்காவர். இந்த குத்துவிளக்கு எரிய — நம்பிபக்கலிலே அர்த்தவிசேஷம் கேட்டு ஜ்வலிக்க என்றபடி. [கோட்டு] "ஏக தேச விக்ருதம் அநந்யவத் பவதி" என்கிற வடமொழி வியாகரண முறையின்படி கோட்டி என்றதாகக் கொள்க. கோஷ்டீ என்னும் வட சொல் கோட்டியென்றுதானே திரியும். திருக்கோட்டியூரென்றதாயிற்று. ] அவ்விடத்திலே [கால் கட்டு] ரஹஸ்யார்த்தமுபதேசித்தருளா நின்ற நம்பிகள் தம் திருவடியைத் தொட்டு சபதம் செய்து கொடுக்கும்படி நியமித்தாரன்றோ; அந்த கால்கட்டு ஸூசிதமாகிறது. [மேலேறி] ஏற்கெனவே தம்மை அநுவர்த்தித்துக் கொண்டிருந்த சில விலக்ஷணர்களுக்கு உபதேசிக்கத் திருவுள்ளம்பற்றிய ஸ்வாமி, ஸன்னிதியின் மேல்தளத்திலேறினபடியைக் காட்டுகிறது. இப்படி ஆசார்ய திவ்யாஜ்ஞையைக் கடந்து உபதேசித்திருப்பரோ சாஸ்த்ர வச்யரான ஸ்வாமி? என்கிற சங்கைக்குப் பரிஹாரம் செய்கிறது [மலர் மார்பா] என்னும் விளி. ஸ்வாமியினுடைய ஹ்ருதய வைசால்யமே அதற்குக் காரணமென்று காட்டினபடி; மலர்ந்தஹ்ருதய முடையவரே! என்று விளித்தபடி.

## 20 முப்பத்து மூவரமரர்க்கு

இப்பாட்டில் 'செப்பமுடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு வெப்பங் கொடுக்கும் விமலா!' என்னும் விளிகள் ஸ்வாமிக்கு மிகவும் ஏற்றிருப்பவை. வடமொழியில் ஆர்ஜவமெனப்படும் குணம் தமிழில் செப்பமெனப்படும். மநோவாக்காயங்களின் ஒற்றுமையாகிற கரண த்ரய ஸாரூப்யமே ஆர்ஜவம்: அதுதான் செப்பம். ஸ்வாமியினுடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஸேவிக்கும்போது ஒவ்வோரக்ஷரமும் அவருடைய ஆர்ஜவத்தையன்றே தெரிவிக்கின்றது. பரநிந்தை முதலியவற்றை நெஞ்சாலும் நினையாமலும் வாக்கிலும் காட்டாமலுமிருந்த பெருமை ஸ்வாமிக்கும் ஸ்வாமியின் புநரவதார பூதரான மணவாளமாமுனிகளுக்கும் அஸாதாரணமன்றோ. [திறலுடையாய்!] திறலாவது பராபிபவந ஸாமர்த்தியம். நீறுபூத்த நெருப்புப்போலே யிருந்து இதர வாதிகளின் துர்வாதங்கள் தலையெடுக்க வொட்டாதபடி செய்தருளுமாற்றலும் ஸ்வாமிக்கு அஸாதாரணம். [செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும்] செற்றாராகிறார் எம்பெருமானுடைய பெருமையை ஸஹியாதே "குணிநமபி குணாஸ் தம் தரித்ராணம்--ஆஹு:" என்ற பட்டர் ஸ்ரீஸூக்திப்படியே அப்பெருமானை ஸ்வதரித்ரனாகப் பேசிவைத்தவர்கள்; அவர்களுக்கு வெப்பம் கொடுத்தவர் ஸ்வாமி. வெப்பமாவது ஜ்வரம். பீதி ஜ்வரம். *தஸ்மை ராமாநுஜார்

யாய நம: பரம யோகிநே, ய:ச்ருதி ஸ்ம்ருதி ஸூத்ராணாம் அந்தர் ஜ்வரமசீ சமத்* என்று ஸ்வாமி ச்ருதி ஸ்மிருதி ஸூத்ரங்களுக்கிருந்த அந்தர் ஜ்வரத்தைப் போக்கடித்ததாகச் சொல்லிற்று. அதை எங்கே போகவிட்டார் தெரியுமோ? செற்றாருடைய உள்ளத்திலே போக விட்டாராயிற்று. திருவடி இலங்கையைக் கொளுத்தினரே, எந்த நெருப்பைக் கொண்டு கொளுத்தினரென்று கேட்க, வாலில் அரக்கர் பற்ற வைத்த நெருப்பினால் என்றார்களாம்; அன்று அன்று; "சோக வஹ்நிம் ஜநகாத்மஜாயா: ஆதாய தேநைவ ததாஹ லங்காம்" என்று, பிராட்டி திருவயிற்றிலே மண்டிக்கிடந்த சோகாக்னியை அங்கு நின்றும் கிளப்பி அதனாலேயே இலங்கையைக் கொளுத்தினரென்றார் மர்மஜ்ஞர். அது போலவே யிங்கும். ச்ருதி ஸ்ம்ருதி ஸூத்ரங்களின் அந்தர் ஜ்வரத்தை யெடுத்துச் செற்றார்வயிற்றி லெறிந்தபடி. ... ... *

## 21 ஏற்றகலங்களெதிர் பொங்கிமீதளிப்ப

"வள்ளல் பெரும் பசுக்கள் ஆற்றப் படைத்தான்" என்னும் போது ஸ்வாமியின் பெருமை தவிர வேறு எதுவும் நினைவுக்கு வாராது. ஸ்வாமிக்கு முன்பிருந்த ஆசார்யர்களையெடுத்துக் கொண்டு அவர்களுக்கு எத்தனை சிஷ்யர்கள்? என்று கேட்டால் இருவர் மூவர் நால்வர் ஐவர் என்ன வேண்டுமத்தனை; ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்களைப் பற்றிக் கேட்டாலோ "ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரை: ஸம்ஸேவிதஸ் ஸம்யமிஸப்தசத்யா" என்று உடனிருந்தவர்கள் பேசும்படியாயிருக்கும். அன்றியும், மஹாஜ்ஞான நிதிகளாகத் தேர்ந்தெடுத்து எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளென்று ஸ்தாபிக்கப்பட்டுள்ளார்கள். அவர்கள் தாம் எப்படிப் பட்டவர்களென்னில்? [ஏற்றகலங்கள்] ஆசார்ய ஸார்வபௌமர்க்கு ஏற்றிருக்குந் தன்மையை யுடைய ஸத்பாத்ரபூதர்களான ஸச்சிஷ்யர்கள். பின்னையும் எப்படிப்பட்டவர்களென்னில்; [எதிர்பொங்கி மீதளிப்ப] "சிஷ்யாதிச்சேத் பராஜயம்" என்னும்படி ஆசார்யரையும் விஞ்சினவர்களாயிருப்பர்கள். காச்மீரத்தில் சாரதாபீடத்தில் ஸ்வாமியும் ஆழ்வானும் போதாயநவ்ருத்தியைக் கடாக்ஷியா நிற்க அதற்கு இடையூறு விளைந்த போது 'க்ரந்தத்தைப் பூர்த்தியாகப் பார்க்க முடியவில்லையே!' என்று ஸ்வாமி க்லேசிக்க, அந்த வ்ருத்திக்ரந்தத்தைப் பூர்த்தியாகக் கடாக்ஷித்து அத்தனையும் ஹ்ருதி தரித்துக் கொண்டிருந்த ஆழ்வான் "இங்கே விண்ணப்பஞ் செய்யவோ? இரண்டாற்றின் நடுவே விண்ணப்பஞ் செய்யவோ?" என்று பணித்தாரென்று ப்ரஸித்தம். இப்படியே யன்றோ மேன்மேலுமுள்ள சிஷ்யவர்க்கங்களின் சரித்திரமும். அவர்கள் இன்னமும் எப்படிப்பட்டவர்களென்னில்; [மாற்றாதே பால் சொரியும்] அவ்வாசாரியர்களின் பரம்பரை பெரும்பாலும் அநுஸ்யூதமாக நிகழ்ந்து வந்து பால் போன்ற அர்த்த விசேஷங்களைச் சொரிந்து கொண்டிருக்கும்படி சொன்னவாறு. இத்தகைய வள்ளல் பெரும்பசுக்களை ஆற்றப் படைத்தவர் ஸ்வாமி. ஆற்ற — அபரிமிதமாக. மேலே "மாற்றாருனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண்" என்ற விடத்து யாதவப்ரகாசர் வந்து பணிந்த விருத்தாந்தம் மிகப்பொருத்தம்.

## 22 அங்கண்மா ஞாலத்தரசர்

"திங்களுமாதித்தியனு மெழுந்தாற்போல் அங்கணிரண்டுங் கொண்டு" என்றதில் ஸ்வாமியினுடைய உபயவேதாந்தக்ரந்தப்ரவசந படுத்வம் பேசப்படுகிறது. திங்களும் ஆதித்தியனும் ஏககாலத்தில் எழுவது அஸம்பாவிதம். ஆதித்யனெழும்போது தீக்ஷ்ணதையும், திங்கள் எழும் போது தண்ணளியும் அநுபவிக்கலாயிருக்கும். உபய வேதாந்தப்ரவர்த்தகரான ஸ்வாமி காலை வேளைகளில் ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் ஸாதிப்பதும், மாலை வேளைகளில் அருளிச்செயல் [பகவத் விஷய] காலக்ஷேபம் ஸாதிப்பதுமாயிருப்பர். மதாந்தர ப்ரத்யாக்க்யாநதத்பரமான ஸ்ரீபாஷ்யத்தின் அர்த்தங்கள் அநுபவிக்கப்படும்போது தீக்ஷ்ணதையும், *செவிக்கினிய செஞ்சொல்* *ஈரச் சொல்"* என்ன நின்ற அருளிச்செயல்களின் அர்த்தங்கள் அநுபவிக்கப்படும்போது ஸௌம்யதையும் காணலாயிருக்கும். இரண்டிலுமிரண்டுமுண்டானாலும், "இப்படிச் சொல்லுகிறதும் ஊற்றத்தைப் பற்றி" என்ற ஸ்ரீவசந பூஷணப்ரக்ரியையிலே கொள்ளக் கடவது. மேலே* அங்க

ணிரண்டுங் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல்* என்றவிடத்திலும் உபய வேதாந்தப் பொருள்களையும் எங்களுக்குக் கடாக்ஷித்தருள வேணுமென்ற ப்ரார்த்தனையுள்ளது "சக்ஷுஷ் மத்தா து சாஸ்த்ரேண" என்றபடி கண்ணென்பது சாஸ்த்ரமேயாம். உபய வேதாந்தங்களும் ஸ்வாமிக்கு இரண்டு திருக்கண்களென்க. ஒன்றில் ஆதரமும் மற்றொன்றில் அநாதரமும் கொண்டிருக்கையே சாபமாகும். அது தொலைய வேணுமென்றவாறு. ஸ்வாமி பக்கலிலே சிஷ்யர்கள் ப்ரார்த்திப்பது இதுவே.

## 23 மாரிமலைமுழஞ்சில்

"அறிவுற்றுத் தீவிழித்து வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்படும் சீரியசிங்கம்" நம் யதிஸார்வபௌமஸிம்ஹம் தவிர வேறுண்டோ? நூற்றந்தாதியில் "கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் கலைப்பெருமான் ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமாநுசன்" என்று சீரிய சிங்கமாகச் சொல்லப்பட்டவர் ஸ்வாமி. உலகில் சிங்கம் ஹேயமானவுணவையுண்டு செருக்கியிருக்கும்; யதிராஜஸிம்ஹம் திருமங்கையாழ்வாருடைய திவ்யஸூக்திகளையுண்டு அதனைத் தடித்திருக்குமென்கிறார் அமுதனார். இதற்கு மலையும் முழஞ்சும் விலக்ஷணமாயிருக்கும். முந்நூற்றுண்டு வேதமோதின பரத்வாஜ மஹர்ஷிக்கு தேவேந்திரன் வேதங்களை மலையாகக் காட்டினனென்று வேதமே சொல்லுகையாலே வேதமே மலையாகக் கொள்ளவுரியது. அதில் முழஞ்சாவது *தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்* என்னும்படி தர்மஸூக்ஷ்மங்கள் பொதிந்திருக்குமிடம். அதிலே மன்னிக் கிடந்து லௌகிக விஷயங்களில் திருக்கண்செலுத்தாதே *ஆத்மந்யேவ ஆத்மாநம் பச்யந் ஸங்கித்திருப்பவர் ஸ்வாமி. (அறிவுற்று.) நாம் அவதரித்தது எதற்காக? என்று தம் அவதாரப்ரயோஜனத்தைக் குறிக்கொண்டு என்றபடி. (தீவிழித்து) (அமரகோசே) *புத்திர் மநீஷா திஷணா தீ:* என்றவிடத்து புத்திபர்யாயமாகப் படிக்கப்பட்ட (தீ:) என்பது இங்குத் தீயென நிற்கின்றது. அது விழித்திருப்பது—விகஸித்திருப்பது ஸ்வாமிக்கேயென்க. [எப்பாடும் பேர்ந்து உதறி.] *ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரிஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீ நாராயணம் நைமிசம், ஸ்ரீமத் த்வாரவதிப்ரயாக மதுரா யோத்யா கயா புஷ்கரம் ஸாளக்ராம கிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:* என்கிறபடியே எண்டிசையும் பாதசாரத்தாலே ஸஞ்சரித்து, ஆங்காங்கு விபக்ஷர்களுண்டாகில் அவர்களை உதறியருளினவர் ஸ்வாமி. .... *

## 24 அன்றிவ்வுலகமளந்தாய்

இதில் "வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி" என்றதை உயிராகக் கொள்க. கொல்வது கோல் என்னுமாபோலே வெல்வது வேல் எனப்படும். கண்ணபிரான் திருக்கையில் வேலாகச் சொல்லப்படுவது திருவாழியாழ்வான். ஸ்வாமி திருக்கையில் வேலாகச் சொல்லப்படுவது த்ரிதண்டம். ஸப்ததியில் "விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:" என்று, சேனையர்கோன் ஸ்வாமியாகத் திருவவதரிக்க, உபயவிபூதி நிர்வாஹ நிபுணமாய் அவருடைய திருக்கையிலுள்ள திருப்பிரம்புதானே த்ரிதண்டமாயிற்று என்னப்பட்டது. அந்தத்திருப்பிரம்புக்கு எவ்வளவு சக்தியோ அவ்வளவும் ஸ்வாமியின் த்ரிதண்டத்துக்குமுண்டென்க. தாடீபஞ்சகத்தில் ஸ்வாமிக்குப் பேசவேண்டிய பெருமைகளெல்லாம் த்ரிதண்டத்தின் மேலும் யஜ்ஞஸூத்ரத்தின் மேலும் ஏறிட்டுப் பேசப்பட்டுள்ளன. அங்ஙனம் பேசுகையில் "பாஷண்டஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:—ராமாநுஜஸ்ய விலஸந்தி முநேஸ் த்ரிதண்டா:" என்றும், "தத்தே ராமாநுஜார்ய: ப்ரதிகதக சிரோ வஜ்ரதண்டம் த்ரிதண்டம்" என்றும் பேசப்பட்டதுண்டே, அதுதான் வென்று பகை கெடுக்குமென்றதற்கு விவரணம். அப்படிப்பட்ட கையில் வேலாகிய முக்கோலுக்கு மங்களாசாஸனம் செய்தது முக்கோல் பிடித்த முனிக்கே மங்களாசாஸனம் செய்தபடியாமென்றுணர்க.

## 25 ஒருத்திமகனாய்ப் பிறந்து

*தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த கஞ்சன் கருத்தைப் பிழைப்பித்து அவன் வயிற்றில் நெருப்பென்ன நின்றவர் ஸ்வாமி. கம்ஸன் கண்ணனிடத்திலே அனர்த்தம் விளைக்க

வழிதேடியிருந்ததுபோல நம் ஸ்வாமிக்கு அனர்த்தம் விளைக்க வழிதேடியிருந்தவர் ஒருவர் ப்ரஸித்தர். அவருடைய கருத்தைப் பிழைப்பித்து [தடைபடச்செய்து] ஓரிரவில் ஒளித்து வளர்ந்தவர் ஸ்வாமி. விந்த்யாடவியெங்கே! ஸத்யவ்ரத க்ஷேத்ரமெங்கே! ஓரிரவில் அங்கு நின்றும் இங்கு வந்து சேர்ந்தவர் தம் ப்ரபாவங்களையெல்லாம் ஒளித்துவைத்திருந்தாரத்தனையன்றோ. அன்னவர் ஆஸுர ப்ரக்ருதிகளின் வயிற்றில் நெருப்பென்ன நின்றார். "பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹந:" 'பாஷண்ட ஸாகர மஹாபடபாமுகாக்நி:" என்று நெருப்பாகவேயன்றோ பேசப்பட்டார் ஸ்வாமி. [நெடுமால்] வியாமோஹங் கொண்டவர். "அச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத:" என்ற ஸ்வாமி தனியன் காண்க.

## 26 மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான்

இதில் *ஆலினிலையாய்!* என்ற விளி இன்சுவை மிக்கது. *ஆலின் இலையதன்மேல் பையவுபோது துயில்கொண்ட பரம்பரன் கண்ணன். [ஆலின் இலையாய்!] ஆலமரத்தின் நிலைமைபோன்ற நிலைமையுடையவர் ஸ்வாமி. எம்பெருமான் "பாஹுச்சாயா மவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மந:" என்கிறபடியே தன் பாஹுச்சாயையிலே ஒதுங்கினவர்களுக்கு நிழல்கொடுத்துத் தாபம் தீர்ப்பவன். ஸ்வாமியோ வென்னில் 'ப்ராப்தாநாம் பாதமூலம் ப்ரக்ருதி மதுரயா ச்சாயயா தாப ஹ்ருத் வ:" என்றாப்போலே அடிபணிந்தார்க்குத் திருவடிநிழல் கொடுத்துத் தாபம் தணிப்பவர். இதுதானே ஆலின் நிலைமை, நூற்றந்தாதி தொடங்கும்போதே "பல்கலையோர் தாம் மன்னவந்த இராமாநுசன் சரணாரவிந்தம்" என்றன்றோ தொடங்கிற்று. *புல்கலையோர் தாம் மன்ன வந்த* என்ற விசேஷணத்தை இராமானுசனுக்கு ஆக்குவது போலவே அவருடைய சரணாரவிந்தத்திற்குமாக்கலாமே. "ந்யக்ரோதோ பஹுபாத் வட:" என்ற அமரகோசம் ஆலமரத்திற்கு பஹுபாத் என்று பெயர் படித்தது. உண்மையில் ஆலமரமானது மற்ற மரங்களைப் போலன்றிக்கே அபரிமிதமான பாதங்களையுடைத்தாயிருக்கும். ஸ்வாமிக்கும் திருவடிகள் அபரிமிதங்கள். [சிஷ்யர்களே திருவடிகள்.] இப்பாட்டில் சொன்ன 'சங்கம் பெரும்பறை பல்லாண்டிசைப்பார் கோலவிளக்கு கொடி விதானம்' என்னுஞ் சொற்களை ஊன்றி நோக்கினால் இவையெல்லாம் ஸ்வாமியே யென்னப் பொருந்தும். [சங்கம்] த்ருவனிடஞ் சென்ற பகவான் சங்கஸ்பர்சத்தினால் அவனை ஸர்வஜ்ஞனாக்கினதாகப் புராணங் கூறும்; அதுபோல, ஸ்வஸம்பந்தத்தாலே ஆழ்வான் ஆண்டான் அனந்தாழ்வான் எம்பார் பிள்ளான் முதலானோரை ஸர்வஜ்ஞராக்கினவர் ஸ்வாமி. (பறை) புகவத் குணங்களை எங்கும் பறை சாற்றினவராகையாலே தாமே பறையென்னத் தகுவர். (பல்லாண்டிசைப்பார்) பெரியாழ்வார்போலே எம்பெருமானுக்குத் தாம் பல்லாண்டு பாடினது மட்டுமன்றியே பல்லாயிரவரைப் பாடுவிக்கவும் வல்லராயிருந்தார். (கோலவிளக்கு) ஸ்ரீ வைஷ்ணவ குல ப்ரதீபமாயிருந்தவர். (கொடி) 'ஸ்ரீமல்லக்ஷ்மண யோகீந்த்ர ஸித்தாந்த விஜயத்வஜ' மென்று பிறரைச் சொல்லும்போது ஸ்வாமிக்குச் சொல்லவேணுமோ? விசிஷ்டாத்வைத ஸித்தாந்த விஜயத்வஜமென்க. (விதானம்) கண்ணன் வடமதுரையிலிருந்து திருவாய்ப்பாடிக் கெழுந்தருளும்போது "தொடுத்து மேல் விதானமாய பௌவநீரராவணை" என்ற திருச்சந்த விருத்தத்தின்படியே விதானமாயிருந்தவர் ஆதிசேஷனான திருவனந்தாழ்வான்; அவரேயன்றோ ஸ்வாமியாக வடிவெடுத்தார்.

## 27 கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா!

யஜ்ஞமூர்த்தி போல்வாரான பலபல அத்வைதிகள் முதலிலே ஸ்வாமியோடு எதிரம்பு கோப்பவர்களாய் [கூடாதவர்களாய்] இருந்து பிறகு கூடினவர்களாய் ஸ்வாமிக்கு வெற்றியைத் தந்தார்கள். அவர்களை வெல்வதற்கு உறுப்பாயிருந்த சீர்களை யுடையவர் ஸ்வாமி. அந்தச் சீர்கள் எவை யென்னில்; கேவலம் வைதுஷ்யம் மட்டுமல்ல; திவ்ய மங்கள விக்ரஹ குணங்களும், திவ்யாத்ம குணங்களும் பலபல. ஸ்வாமியின் வடிவழகை ஸேவித்த மாத்திரத்திலேயே யீடுபட்டவர்கள் பல பலர். (கோவிந்தா) பசுக்களை மேய்ப்பதனாலே கண்ணன் கோவிந்தனானான்;

ஸ்ரீஸூக்திகளும் கோசப்தார்த்தமென்று கீழே காட்டிறே மாகையாலே ஸகலப்ரமாணங்களையும் "பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி" என்னும்படியான பீதியைப் போக்கி ரக்ஷித்தமையாலே ஸ்வாமியும் கோவிந்தர். பசுப்ராயர்களான நம்மைக்காத்தவரென்றுமாம்.

## 28 கறவைகள் பின்சென்று

"குறையொன்று மில்லாத கோவிந்தா! உன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்னும் வார்த்தை ஸ்வாமி யெம்பெருமானரை நோக்கி ஸ்ரீவைஷ்ணவ குலத்தவர்கள் யாவரும் சொல்லத் தக்கது. ஞானம் அனுட்டானம் பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநத்வம் ஆகிய மூன்றும் ஆசார்ய பீடஸ்தர்களுக்கு அவச்யாபேக்ஷிதங்கள். ஞானமிருந்து அநுஷ்டான மில்லையாகுலும் பயனில்லை; அநுஷ்டானமிருந்து ஞானமில்லையாயினும் பயனில்லை இவை யிரண்டு மிருக்கவேணு மென்பர்; இவையிரண்டு மிருந்தாலுங்கூட, பரஸம்ருத்தியே பேருமிருக்கையில்லையாகில் பயனில்லை; இவைமூன்றும் நன்கு நிறையப்பெற்றவர் ஸ்வாமியே. குறையில்லாத—குறையொன்றில்லாத—குறையொன்று மில்லாத என்று யோஜித்து மேற்சொன்ன மூன்றிலும் குறையற்றிருப்பவர் ஸ்வாமியேயென்று கொள்வது. கூரத்தாழ்வான் ஸ்வாமிக்கிட்ட தனியனில் "தயைகஸிந்தோ:" என்று விசேஷணமிட்டது பரஸம்ருத்த்யேகப்ரயோஜநத்வத்தையே காட்டினபடி. இத்தகைய பெருமைவாய்ந்த ஸ்வாமி நமக்குக் குல கூடஸ்தராகித் திருவவதரிக்கப்பெற்றது வாசாமகோசரமான நமது பெரும் பாக்கியமன்றோ. த்வீபாந்தரங்களிற் பிறவாதே மானிடப்பிறவியிற் பிறந்தது, அதிலும் பகவத்பாகவத பக்தி முதலியவற்றுக்கு நிலமல்லாத மநுஷ்யவர்க்கத்தில் பிறவாதே ஆஸ்திக குடும்பத்தில் பிறந்தது, இவையெல்லாவற்றுக்கும் மேற்பட்டவன்றோ "ததநுபந்த மதாவலிப்தே" என்று பேரறிவாளர் பேசும்படியான பெருமை வாய்ந்த எம்பெருமானர் திருவடி ஸம்பந்தம் பெற்ற ஸ்ரீவைஷ்ணவஸந்தானத்திலே நாம் பிறக்கப்பெற்றது. இந்த ஹர்ஷப்ரகர்ஷத்தைக் காட்டுவதாம் *உன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோமென்பது. உன்றன்னை யென்பதற்கு 'உன்றன்னைக்கொண்டு' என்று பொருள் கொள்வது மிகச் சிறக்கும். உன்றன்னால் என்றபடி. (உருபுமயக்கம்.) *ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம* என்கிறபடியே நாங்கள் ச்ரேஷ்டமான வித்யாஜந்மத்தை தேவரீர் திருவருளாலன்றோ பெற்றிருக்கிறோம். "யதீச்வர ஸரஸ்வதீஸுரபிதாசயா நாம் ஸதாம் வஹாமி சரணம்புஜம் ப்ரணதிசாலிநா மௌலிநா" என்று மஹாசார்யர்கள் ஆசைப்படுவதற்குறுப்பானதிரளிலேயன்றோ ஜனித்திருக்கிறோமென்றவாறு. ஸ்வாமி திருவம்சத்திலே நாம் பிறக்கப்பெற்றது, நம் குலவிளக்காக ஸ்வாமி அவதரிக்கப்பெற்றது ஆகிய இரண்டும் இங்கு விவக்ஷிதமென்க.

## 29 சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச்சேவித்து

*எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோ டுற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோமென்பது நாமெல்லோரும் ஸ்வாமியை நோக்கியே சொல்லத் தகுந்த வார்த்தை. ஆழ்வார்கள் *இருள் தருமா ஞாலத்துள்ளினிப் பிறவி யான்வேண்டேனென்றும், *இயக்கறுத பல்பிறப்பிலென்னை மாற்றியென்றும் *ஆதலால் பிறவி வேண்டே னென்றும் புநர்ஜன்மத்தை வெறுத்துப் பேசுவர்கள். நாம் அப்படி வெறுக்கவேண்டா; எத்தனை ஜன்மங்களும் யதேஷ்டமாக நேரட்டும்; நேருகிற ஜன்மங்கள் தோறும் இப்போது நமக்கு வாய்த்திருப்பது போலவே எம்பெருமானர் திவ்யஸூக்தி ஸுதைகளையே பருகும் பாக்கியம் வாய்த்திடுமாகில் பிறவியில் வெறுப்பு நமக்கேதுக்கு? ஒரு பிறப்பன்று, ஒன்பதினாயிரம் பிறப்புமெடுப்போமாக. அதற்குச் சளைப்போமல்லோம்; ஆனால் அப்பிறவிதோறும் [உன்றன்னோடுற்றோமேயாவோம்] 'இராமானுச னடியார்' என்னும் விருதுக்கு லோபமின்றிக்கே யிருக்கக் கடவோம். [உனக்கே நாம் ஆட்செய் வோம்] "வடுக நம்பி ஆழ்வானையு மாண்டானையும் இருகரை யரென்பர்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸூக்தியின்படியே இருகரையரராகாமே வடுக நம்பியைப் போலே ஸ்வாமிக்கே அடிமை செய்து கொண்டிருக்கக் கடவோம். ஆனல் "வாழி யெதிராசன் வாழி யெதிராசன், வாழி யெதிராச னென வாழ்த்துவார், வாழியென வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில் தாழ்த்து

வார் விண்ணோர்தலை." என்று மாமுனிகளருளிச் செய்தபடியே நமக்குப் புநர்ஜன்ம மின்றிக்கே முக்தி ஸாம்ராஜ்யம் ப்ராப்தமாய்விடுமாறாலும் *ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின்போவதே* என்கிற திருமங்கையாழ்வாரநுஸந்தானமே யாயிருக்கக் கடவோம். *கையில் கனி யென்னக் கண்ணனைக் காட்டித் தரினும், உன்றன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்* என்ற அமுதனாரநுஸந்தானமே உறைத்திருக்கக் கடவது நமக்கு.

## 30 வங்கக்கடல் கடைந்த மாதவனை

திருப்பாவை முப்பதுக்கும் வங்கக்கடல் கடைந்த மாதவன் தான் லக்ஷ்யபூதன். கண்ண பிரானை லக்ஷ்ய பூதனாகக் கொள்ளுமவர்கள் தேவர்களின் ப்ரார்த்தனையினால் கடலைக் கடைந்து அமுதங் கொடுத்து "பலேக்ரஹிர் ஹி கமலாலாபேந ஸர்வச்ரம:" என்று பட்டரருளிச் செய்த படியே பிராட்டியையும் பெற்று மகிழ்ந்த எம்பெருமானைப் பொருளாகக் கொள்க. திருப்பாவை ஜீயரென்ற திருநாமத்திற் கேற்ப எம்பெருமானாரையே திருப்பாவைக்கு லக்ஷ்ய பூதராகக் கொள்ளுமவர்கள் இங்ஙனே பொருள் காண்க;—*நிர்மத்ய ச்ருதி ஸாகராத்* என்றும் *நமாம் யஹம் த்ராவிட வேதஸாகரம்* என்றும் கடலாகச் சொல்லப்பட்ட ஸம்ஸ்க்ருத த்ராவிட உபய வேதங்களையும் *திருநாவின் மந்தரத்தால் கடைந்து "வசஸ்ஸுதாம்—ஸுமநஸோ பௌமா: பிபந்த்வநவஹம்" என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்தபடி நிலத்தேவர்கள் நித்யாநுபவம் பண்ண அமுதமளித்தவர் ஸ்வாமி. [மாதவனை] மா—மஹத்தான, தவனை—தவத்தை [தபஸ்ஸை] யுடையவரை; மஹாதபஸ்வியை யென்றபடி. தபஸ்விகளில் தலைவான்றோ ஸ்வாமி எம்பெருமானார். [இங்கு இப்பரிசுரைப்பார்.] இங்ஙனே முப்பது பாசுரங்களுக்கும் நாம் காட்டின நிர்வாஹமும் *அணி புதுவைப் பைங்கமலத் தண்டெரியல் பட்டர்பிரான் கோதை திருவுள்ள முகந்ததே யென்று கொண்டு உபந்யாஸ கோஷ்டிகளிலெடுத்துரைக்குமவர்கள். *"செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலா லெங்குந் திருவருள் பெற்று இன்புறுவர்"—*பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து* என்ற பெரியாழ்வாரருளிச் செயலின்படியும், *ஸா மூர்த்திர் முரமர்தநஸ்ய ஜயதி* என்ற ஸப்ததிஸூக்திப்படியும் ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணாவதாரமான எம்பெருமானாருடைய திருவருளை எங்கும் பெற்று *அம்ருதஸாகராந்தர்நிமக்ந ஸர்வாவயவாஸ் ஸுகமாஸீரந்* என்று தலைக்கட்டிற்றுயிற்று.

இத்தம்மண்ணங்கராரியேண லிகிதா விவ்ருதிஸ் ஸதாம்,
போதாயதீந்த்ரபக்தாநாம் ஸ்ருதி வித்யோததாம் ஸதா.

திருப்பாவை ஜீயர் திருவடிகளே சரணம்.

———

## திருப்பாவையில் ஆழ்வார்கள் பதின்மர் திருப்பள்ளியெழுச்சி

திருப்பாவையில் ஆறாவது பாசுரந் தொடங்கிப் பதினைந்தாவது பாசுரத்தளவும் பத்துப் பாசுரங்களினால் ஆண்டாள் தன்னுடைய திருத்தகப்பன்மார்களான ஆழ்வார்கள் பதின்மரையும் திருப்பள்ளி யுணர்த்துகிறாளென்பது பெரியோர் நிர்வஹித்துப் போரும் ஒரு பரம ரஹஸ்ய விசேஷார்த்தம். ஆழ்வார்களை எந்த அடைவில் ஆண்டாள் பேசியிருக்கின்றாளென்னில், தன்னைப் பெற்றெடுத்து வளர்த்த பெரியாழ்வார் தொடங்கி அவரோஹணக் கிரமமாகப் பொய்கை யாழ்வாரளவுஞ் சென்று அவ்வேழு திருநாமங்களையும் ஏழு பாசுரங்களினால் உணர்த்தி, பிறகு இன்

காலத்திற்குப் பின்பு திருவவதரிக்கப் போகின்ற அன்பர்தாள்தூளி, நற்பாணன், நன்கலியன் என்ற மூன்று ஆழ்வார்களையும் அகக் கண்ணினாலுணர்ந்து அவர்களை மூன்று பாசுரங்களினால் அடைவே உணர்த்தித் தலைக்கட்டுகிறாள்.

ஆகவே ஆழ்வார்கள் திருப்பள்ளியெழுச்சியான இப்பத்துப் பாசுரங்களில் ஒவ்வொரு பாசுரத்தில் ஒவ்வொரு ஆழ்வார்க்குண்டான சொற் பொருத்தம், பொருட் பொருத்தம் முதலியவை ஈண்டுச் சுருக்கமாக நிரூபிக்கப்படுகின்றன அண்ணங்கராசார்யதாஸனால்.

1. **புள்ளுஞ் சிலம்பினகாண்:** இது பெரியாழ்வாரைத் திருப்பள்ளி யுணர்த்தும் பாசுரம். பிள்ளாய்! என்பது இதில் விளி. அறிவில்லாதவனைப் பிள்ளையென்பது எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வம் முதலிய திருக்குணங்களை மறந்தே இவ்வாழ்வார் மங்களாசாஸநத்தில் ஒருப்பட்டாராதலால் பிள்ளை யென்னத் தகுதியுடையராயினர். "ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்ற ஸ்ரீ வசநபூஷண திவ்ய ஸூக்தியும் மங்களாசாஸநத்திற்கு அஜ்ஞானத்தையே மூலமாகக் காட்டிற்று. இவ்வாழ்வார் பெரும்பாலும் நந்தவனத்திலேயே போது போக்கினவராதலால் அவ்விடத்து அடையாளமாகிய புட்களின் சிலம்புதல் முன்னே கூறப்பட்டது. புள்ளரையன் என்று பெரிய திருவடியின் ப்ரஸ்தாவம் செய்திருப்பதில் இப்பெரியாழ்வார் பெரிய திருவடியின் அம்சமாகத் திருவவதரித்தவர் என்று குரு பரம்பரா ப்ரபாவாதிகளிற் கூறியுள்ள விஷயம் முத்ராலங்காரரீதியில் ஸூசிதமாகிறது. *வைநதேயாம்சஸம்பூதம் விஷ்ணு சித்தமஹம் பஜே* என்றது காண்க.

'**வெள்ளை விளிசங்கு**' என்கிற சொல்தொடர் முதன் முதலாகப் பெரியாழ்வாருடைய திருவாக்கில் தோன்றியது. (பெரியாழ்வார் திருமொழி 4-1-7 காண்க.) அதனை இங்கு அநுவதித்துக்காட்டுவது ஒரு வகையான லிங்கம். *பாண்டியன் கொண்டாட...ஈண்டிய சங்கமெடுத்தூத* என்ற தனியனையும் நினைப்பது. **பேய்முலை நஞ்சுண்டு:** பெரியாழ்வார் திருமொழியில் (சீதக்கடலில்) கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பேய்முலை நஞ்சுண்ட கதை முதன் முதலாக அநுஸந்திக்கப்பட்டது. "பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்துண்டிட்டு" என்றது காண்க. மறுபடியும் அந்தச் சரித்திரத்தை அநுஸந்திக்கையில் சகடாஸுரபங்கத்தையும் கூட்டியநுஸந்தித்தார். "நாள்களோர் நாலைந்து" என்ற பாசுரங் காண்க. அதற்குப் பொருந்த இங்கு "பேய்முலை நஞ்சுண்டு கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி" என்றது. "வெள்ளத்தரவில" என்று தொடங்கிப் பெரியாழ்வார்க்குள்ள 'விஷ்ணுசித்தர்' என்னுந் திருநாமமும் அதற்கு விவரணமான "அரவத்தமளியினோடும்" "பனிக்கடலில் பள்ளிகோளை" என்ற பாசுரங்களின் தாற்பரியமும் நன்கு ஸூசிதம்.

2. **கீசுகீசென்றெங்கும்** இது பெரியாழ்வார்க்கு அடுத்த முந்தினவரான குலசேகராழ்வாரை யுணர்த்தும் பாசுரம். "பேய்ப்பெண்ணே! நாயகப் பெண் பிள்ளாய்! தேசமுடையாய்!" என்ற மூன்று விளிகளும் குலசேகராழ்வாரை வற்புறுத்துவன. பெருமாள் திருமொழியில் *மெய்யில் வாழ்க்கையை* என்றவொரு பதிகத்தினால் தம்மைப் பெரும்பேயராகச் சொல்லிக்கொண்டவர் இவ்வாழ்வார். *ஏர் மலர்ப் பூங்குழல், *ஆலைநீள் கரும்பு, *மன்னுபுகழ்க் கௌசலைதன் என்ற பதிகங்களில் பல பெண்களின் தன்மையை யடைந்து பேசினாரிவர். 'கொல்லி காவலன் கூடல் நாயகன்" என்று அரசரான தன்மை தோற்றப் பேசினராதலால் நாயகப் பெண் பிள்ளாய் என்றது. அன்றியும் ஒரு ஹாரத்தில் நட்ட நடுவிலுள்ள மணியை நாயகக்கல் என்பதுண்டு. குரு பரம்பரையில் எம்பெருமானாரை நடுநாயகமென்று யதிராஜ ஸப்ததியில் தேசிகன் கூறினர்; "யதிராஜேந நிபத்த நாயக ஸ்ரீ: மஹதீ குருபங்க்தி ஹாரயஷ்டி;" என்றார். அதுபோலவே ஆழ்வார்களுள் குலசேகரர் நடுநாயகமாகவுள்ளவர். பொய்கையார் பூதத்தார் பேயார் மழிசையர் மாறன் என முன்னே ஐவர்; பட்ட நாதன் கோதை தொண்டரடிப் பொடிகள் பாண்பெருமாள் கலியன் எனப் பின்னே ஐவர்; நடுவே குலசேகரர். ஆகவே இதுபற்றியும் நாயகப்பெண்பிள்ளாய் என்ற விளி நன்கு பொருந்தும். (தேசமுடையாய்) பகவத்கீதையில் (18-43) "சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம்-க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம்" என்று தேஜஸ்ஸா

க்ஷத்ரியதர்மமாகச் சொல்லப்பட்டிருப்பதற்கிணங்க இந்தவிளி இவ்வாழ்வாருடைய க்ஷத்ரியத்வத்தைத் தெரிவிக்கும். அன்றியும், "தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள் போலே ப்ரஹ்மஜன்மமும் இழுக்கென்பார்க்குப்பண்டை நாளில்பிறவி உண்ணாட்டுத்தேசிறே' என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியின் படியும், அதற்கும் மூலமான "மண்ணாட்டில் ஆராகி யெவ்விழிவிற்றாலும், ஆழியங்கைப் பேராயற்கு ஆளாம்பிறப்பு—உண்ணாட்டுத் தேசன்றே' என்ற பெரிய திருவந்தாதிப் (79) பாசுரத்தின்படியும் பகவத்சேஷவத்திற்கு அநுகூலமான பிறப்பே தேஜஸ்ஸென்று நிர்ணயிக்கப்படுகிறது; அப்படிப்பட்ட பிறப்பை' *ஊனேறு செல்வத்து* என்ற பதிகத்தில் பாசுரந்தோறும் ஓரோவிதமாக விரும்பினவர் இவ்வாழ்வாரேயாதலால் தேசமுடையார் இவரேயாகத்தகும். இப்பாட்டில் "ஆனைச் சாத்தன்" என்ற பதப்பிரயோகம் பவனிக்கத்தக்கது. இச்சொல் மலையாளபாஷையிலிருந்து திசைச் சொல்லாகத் தமிழில் வழங்குவதென்பர். (ஆனசாதம்) என்று மலைநாடார் வலியனென்னும் பறவையை வழங்குவராம். இவ்வாழ்வார் மலைநாட்டில் திருவவதரித்தவராதலால் அத்திசைச்சொல் இங்குப் பரவசமாகவே அமைந்தது போலும்! காசும் பிறப்பும் என்று ஆபரண விசேஷங்களைப் பற்றின ப்ரஸ்தாவமிருப்பது இவ்வாழ்வாருடைய சரிதையில் ஆபரண ப்ரஸ்தாவமுள்ளவாற்றை ஒருவாறு நினைப்பூட்டும். 'ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்று அவர்களுக்கே வாரங்கொடு குடப்பாம்பில் கையிட்டவன்' என்ற தனியனையும்ஸ்மரிப்பது. "வாசநறுங் குழலாய்ச்சியர் மத்தினலோசைபடுத்த தயிரரவம்" என்றது பெருமாள் திருமொழியில் "கொண்டையொண்கண் மடவாளொருத்தி கீழையகத்துத் தயிர் கடையக்கண்டு வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ தண்தயிர் நீ கடைந்திட்ட வண்ணம்' என்ற பாசுரத்துச்சொற்சுவைகளை நன்கு நினைப்பூட்டும். (நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும்) கிருஷ்ணாவதாரத்தில் குதிரை வடிவாக வந்த கேசியென்னும் அஸுரனை வதஞ்செய்ததனால் கேசவனென்றது. இவ்வாழ்வார் தமது திருமொழியில் முதன் முதலாக இந்த வரலாற்றையே பேசி யநுபவித்தார். *மாவினை வாய்பிளந்துகந்தமாலை என்று. ஸ்வப்ரபந்தத்தை "நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே" என்று நாராயணனைப் பாடித் தலைக்கட்டினார் கேடடே கிடத்தியோ— இவ்வாழ்வார் நாடோறும் அந்தணர்களைக் கொண்டு ஸ்ரீராமாயண பாராயணஞ் செய்வித்துத் தாம் கேட்டவர். கேட்டு, இருந்த விடத்திலிராமல் படையெடுத்தூஞ் சென்றனர். அந்த விவரத்தை குருபரம்பரையில் காண்க.

3. கீழ்வானம் வெள்ளென்று குலசேகரர்க்கு அடுத்த முந்தினவரான நம்மாழ்வாரையுணர்த்தும் பாசுரமிது. (கோது குலமுடைய பாவாய்)! என்ற விளி நம்மாழ்வாரை வற்புறுத்தும். ('கோது குலமுடைய என்று வழங்கிவரும் பாடம் ப்ரமக்ருபையுடன் மறக்கத்தக்கது. அப்பாடம் நெடுநாளாகவே நாடெங்கும் பரவியதனாலாய அநர்த்தம் பெரிதுமுண்டு. ஸ்ரீபரகால ஸ்வாமி வியாக்கியானம் செய்தருளுமிடத்து "குலம் குலமாக வுனக்குப் பரிசர்யை பண்ணும்படி... .." என்றுரைத்திட்டார். அது. 'கோதுகுலமுடைய' என்கிற (தவறுதலான) பாடத்தில் அபிநிவேசத்தினால் போலும்.) வஸ்துதஸ்து வடமொழியில் கௌதூஹலம் என்ற சொல் தமிழில் கோதுகலமெனத் திரிந்தது. இதில் குகரம் நுழைய ப்ரஸக்தியில்லை. "கோதுகலமுடைக் குட்டனேயோ" என்றார் பெரியாழ்வாரும். கோதுகலமாவது ஆசை. ஆசையையுடைய என்றது எம்பெருமானிடத்தில் ஆசையையுடைய. அல்லது எம்பெருமானுடைய ஆசையைத் தன்னிடத்திலே கொண்டுள்ள என்று இருவகையாகவும் பொருள்படும். பட்டர் நம்மாழ்வாரைப்பற்றிப் பேசும்போது "ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம்' என்று க்ருஷ்ண குதூஹலமே நம்மாழ்வாராக வடிவெடுத்தது என்றார். க்ருஷ்ண த்ருஷ்ணா என்றதும் க்ருஷ்ணனிடத்தில் த்ருஷ்ணை க்ருஷ்ணனுடைய த்ருஷ்ணை என இருவகையாகவும் விரியும். இதனால் நேரின பொருளை "கைம்மாதுன்பொழித்தாயென்று கைதலை பூசலிட்டே, 'மெய்மாலா யொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே" என்ற பாசுரத்தினால் நம்மாழ்வார் தாமே வெளியிட்டருளினர். "ப்ரியோஹி ஞானிநோத்யர்த்தம் அஹம் ஸச மமப்ரிய:" என்றபடி நானும் எம்பெருமானிடத்துக் குதூகலங் கொண்டேன். அவனும் என்னிடத்துக் குதூஹலங் கொண்டான் என்றருளிச் செய்தவர் நம்மாழ்வார். பாவாய்! என்ற விளியும் இவர்க்குப் பொருந்

தும். திருவாய்மொழியில் "சூழ்வினை யாட்டியேன் பாவையே" என்றும் "என்பாவை போயினித்தண் பழனத்திருக்கோளூர்க்கே" என்றும் பலவிடங்களில் தம்மைப் பாவையாகச் சொல்லிக்கொண்டவர் இவ்வாழ்வார். **'எழுந்திராய்'** என்ற சொல்லாற்றல் நன்கு நோக்கத்தக்கது; உட்கார்ந்திருப்பவரையன்றோ எழுந்திராயென்பது. மற்றையாழ்வார்களெல்லாரும் அர்ச்சையில் நின்ற திருக்கோலமாகவேயுள்ளனர்; நம்மாழ்வாரொருவரே வீற்றிருந்த திருக்கோலம். "**பத்மாஸநோப விஷ்டம்**" என்கிற பூர்வாசார்யச்லோக ரத்னமும் இங்கு அநுஸந்தேயம். (கீழ்வானம் வெள்ளென்று.) உதயகாலத்தில் கிழக்கு வெளுக்கும். இங்கும் வகுளபூஷண பாஸ்கரோதயமாகலாலும், அது தானும் கலியுகத்தின் உதய காலத்திலாதலாலும் கிழக்கு வெளுத்ததாகச் சொல்லிற்று. கீழ்வானமென்றபோதே மேல்வானம் நினைவுக்கு வரும். நித்திய விபூதி மேல்வானமாகும். லீலா விபூதியானது நம்மாழ்வாருடைய திருவாய்மொழி யவதாரத்தாலே "ஓராயிரத்துளிப் பத்து உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" இத்யாதிப்படியே தானே பரமபதமாயிற்று. ஆகவே கீழ்வானமான இவ்விபூதி வெள்ளென்றது. (எருமை சிறுவீடு மேய்வான்) வீடு என்று மோக்ஷம்; சிறுவீடு என்று கைவல்ய மோக்ஷம் இந்த ஸங்கேதமிட்டருளினவர் நம்மாழ்வார். திருவாய்மொழியில் (4-1-10) "குறுகமிகவுணர்வத்தொடு நோக்கி" என்றபாசுரத்தின் பொருள் கொண்டு இஃது அறியத்தக்கது. எருமை என்பது தாமஸப்ரக்ருதிகளை. நம்மாழ்வார் திருவவதாரம் செய்தருள்வதற்கு முன்னே பலரும் தாமஸப்ரக்ருதிகளாய் நல்வீடு செல்லாது சிறுவீடு முதலியவற்றிற்சென்று பாழாயினர் என்பது இங்கு ஸூசிதம். (மிக்குள்ள பிள்ளைகளுமித்யாதி.) மற்றைப் பிள்ளைகளையும் போகவொட்டாமல் தடுத்து இப்பிள்ளை வாசலில்வந்து துவள்வதனால் இவளுக்குண்டான விலக்ஷணமான ஏற்றம் தோற்றுவதுபோல, மற்றையாழ்வார்களிற் காட்டில் நம்மாழ்வார்க்குண்டான ப்ரபந்நஜந கூடஸ்தத்வமாகிற ஏற்றம் தோற்றுவிக்கப்பட்டது. **'போவான்போகின்றாரை'** என்ற பிரயோகம் வெகு ஆச்சரியமானது. 'போவதற்காகப் போகிறவர்கள்' என்று சொல்வதுண்டோ? இல்லை. அப்படியிருக்க ஏன் சொல்லிற்று? போவதுதானே ஸ்வயம்ப்ரயோஜனமென்று காட்டுவதற்காகவே சொல்லிற்று. இத்தகைய பிரயோகம் முதன் முதலாக நம்மாழ்வார் திருவாக்கில்தான் வந்தது; திருவிருத்தத்தில் போவான் வழிக்கொண்ட மேகங்களே!" என்றார். [உன்னைக்கூவுவான் வந்துநின்றோம்) "கூவிக்கொள்ளும் காலமின்னங் குறுகாதோ" "என்னைக் கூவியருளாய் கண்ணனே" "கூவிக்கொள்ளாய் வந்தந்தோ" என்று பலகாலும் விரும்பினபடியே கூவுவான் வந்துநின்றோமென்கிறாள். (மாவாய் பிளந்த தேவாதிதேவனை) இப்போது ஆண்டாள் நோற்பதுபோல நம்மாழ்வாரும் ஒரு திருவாய்மொழியில் நோன்பு நோற்றார். "வீற்றிருந்தேழுலகும்" என்ற திருவாய்மொழியில் "ஏற்றநோற்றேற்கு" என்று முதலிலும் "வண்டமிழ் நூற்க நோற்றேன்" என்று முடிவிலும் வருவதுகாண்க. அங்ஙனம் நோற்ற திருவாய்மொழியில் தேவாதிதேவனை அநுபவிக்கின்ற ஆழ்வார் மாவாய் பிளந்தானென்ற விசேஷணத்தையே முதற்பாட்டில் இட்டருளினர்; "வெம்மாபிளந்தான் தன்னை" என்றது காண்க. ப்ரதமப்ரபந்தத்தில் "இமையோர் தலைவா!" என்றும், சரமப்ரபந்தத்தில் "அயர்வறுமமரர்களதிபதி" என்றும் தேவாதி தேவனையே முந்துற முன்னம் ஸேவித்தாராழ்வார். (சென்று நாம் சேவித்தால்) "வானநாயகனே! அடியேன் தொழவந்தருளே" என்று தேவாதி தேவனை நீர் உம்மிடம் வருமாறு அழைத்தீர்; அங்ஙனமல்லாமல் அவனிடம் நாம் சென்று சேவிக்கலாம் வாரும் என்றழைக்கிறாள் போலும். ஆவவென்று "ஆவாவென விரங்கார் அந்தோ வலிதேகொல், மாவாய் பிளந்தார் மனம்" என்றும், "அடியேற்கு ஆவாவென்னுமே" என்றும் நீர் விரும்பினபடியே மாவாய் பிளந்த பெருமான் உமக்கு ஆவாவென்பன் என்று காட்டுகிறபடி. **[ஆராய்ந்து]** "ஆரென்னையாராய்வார்" என்ற உம்முடைய குறையும் தீரும் என்று காட்டியபடி.

**4. தூமணிமாடத்து** நம்மாழ்வார்க்கு அடுத்த முந்தினவரான திருமழிசைப்பிரானையுணர்த்தும் பாசுரமிது. இதில் மாமான் மகளே! என்ற விளி ஒருவகையான தேஹஸம்பந்தத்தில் நோக்குடையது. ஆண்டாளுக்கும் திருமழிசை யாழ்வார்க்கும் ஒருவகையான தேஹஸம்

பந்தமுண்டு. அதாவது ஸ்ரீதேசிகன் கோதாஸ்துதியில் "கமலாமிவாந்யாம் கோதாம்" என்றும் "ஸந்த:பயோதி துஹிதுஸ் ஸஹஜாம் விதுஸ்த்வாம்" என்றும் அருளிச் செய்தபடியே ஆண்டாள் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியானவள் "பார்க்கவீ லோகஜநநீ க்ஷீரஸாகர ஸம்பவா" என்ற அமர கோசத்தின் படியும் இதிஹாஸபுராண வரலாற்றின்படியும் லக்ஷ்மி (ஆண்டாள்) ப்ருகு குலத்தில் தோன்றியவள். திருமழிசைப்பிரானும் ப்ருகு குலத்தில் தோன்றியவரென்பது சரித்திர ஸித்தம். இத்தகைய ஸமாந குலஸம்பந்தம் இங்கு நோக்கத்தக்கது. ரிஷிகுலத்திலே பிறந்து பிரம்பன் குடியிலேயானுர் அவர். ப்ராஹ்மண குலத்திலே பிறந்து கோபாலர் குலத்திலேயானுள் இவள். இதுவும் ஒற்றுமை நயம். [தூமணி மாடத்து] சிறந்த மாணிக்கக் குப்பியினுள்ளேயுள்ளது வெளியில் நிழலிட்டுத் தோன்றும். திருமழிசைப்பிரான் "உட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டிடே" என்று வேண்டிக்கொண்டபடியே உள்ளிருந்த திருமால் அப்படியே வெளியிற் பொசிந்து காட்சி தந்தமையால் இவர் தூமணிமாட மென்னத் தகுதியுடையார். (சுற்றும் விளக்கெரிய) விளக்காவது ஞானவொளி. "சாக்கியங் கற்றேரஞ் சமண்கற்றேரும் சங்கரனு ராக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்" என்றபடி இவ்வாழ்வார் ஸகல மதங்களிலும் புக்கு ஸர்வதோ முகமான ஞானவிளக்கம் பெற்றவராதலால் சுற்றும் விளக்கெரிதல் இவர்க்கு அஸாதாரணம். "யானறிந்தவாறு ஆரறிவார்" என்றும் "என் மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலை" என்றும் இவரது பாசுரங்களினுலும் இது ஸித்தம். [தூபம் கமழ] சிறந்த ஞானமிருத்தல் மாத்ரம் பயன் படாது; அது நன்கு பரிமளிக்கவேண்டும். எம்பெருமானையன்றி வேறொரு தெய்வத்தைத் தொழாதிருத்தலே ஞானத்திற்குப் பரிமளம். "மறந்தும் புறந்தொழமாந்தர்" என்பது இவ்வாழ் வாருடைய திருவாக்காகும். (துயிலணை மேல் கண்வளரும்) இவ்வாழ்வாருடைய திருக்கண் செல்வது சயனத்திருக் கோலமான எம்பெருமான்களின் மீதுதான். கச்சி வெஃகாவிலும் திருக்குடந்தையிலுமே பெரும்பாலும் இவர் காலம் கழித்தது. சயனத் திருப்பதிகளையே ஒரு கோவையாக வெடுத்துப் பாசுரம் பாடினவரும் இவ்வாழ்வார்; "நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள் நாகத்தணை யரங்கம் பேர் அன்பில் நாகத்தணைப் பாற்கடல் கிடக்கு மாதிநெடுமால், அணைப்பார் கருத்தனுவான்" என்றது காண்க. (துயிலணைமேல் கண்வளரும் மாமான் மகளே!) மகள் என்றதனுல் விதேயத்வம் சொன்னபடி. மகள் சொற்படி தந்தை கேட்பதும் தந்தை சொற்படி மகள் கேட்பதும் வழக்கம். மாமான் என்றது மஹா மஹான் என்றபடி. துயிலணைமேல் கண்வளரும் மாமான் யதோக்தகாரி யெம்பெருமான்; அப்பெருமாள் இவ்வாழ்வார் சொற்படி கேட்டவர்; "கணி கண்ணன் போகின்றுன் நீயுமுன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்ற போது அப்படியே சுருட்டிக்கொண்டு புறப்பட்டார்; "உன்றன் பைந் நாகப்பாய் விரித்துக்கொள்" என்றபோதும் அப்படியே. இனி, துயிலணைமேற் கண்வளரும் மாமான் ஆராவமுதன்; அப்பெருமாளும் "எழுந்திருந்து பேசு வாழிகேசனே" என்ற இவ்வாழ் வாரது வேண்டுகோளின்படி எழுந்திருந்தவர் என்பது ப்ரஸித்தம். அன்றிக்கே "மாமான் மகளே"—மஹா மஹானுன பேயாழ்வாருடைய சிஷ்யரே என்றபடியுமாம். *பூதம் ஸரச்ச தனி யனும் பேயாழ்வாரை மஹதாஹ்வய ரென்றே ஓதிற்று. (உன் மகள் தான் ஊமையோ) வாய்திறவாமலே ஹஸ்தசேஷ்டை முதலியவற்றுல் காரியம் செய்வது ஊமைகளின் பணி. இவ்வாழ்வாரும் யாத்திரை யடைவில் பெரும்புலியூரென்னும் கிராமத்தில் ஒரு வேதியன் வீட்டுவாசல் திண்ணையில் சிறிது பொழுது எழுந்தருளியிருக்க அங்கு வேதமோதிக் கொண் டிருந்த அந்தணர்கள் நீறுபூத்த நெருப்புப்போலுள்ள ஆழ்வாருடைய மஹிமையைத் தெரிந்து கொள்ளாமல் அவரைக் கீழ்ச்சாதியாராக வெண்ணி வேதாத்யயநம் அவருடைய காதிற் படலாகாது என்று கருதி ஓத்துந் தவிர்த்திருக்க, அக்குறிப்பையறிந்த ஆழ்வார் அவ்விடத்தை விட்டுத் தூரத்திற் சென்று வேறேரகத்து மேடையில் வீற்றிருக்கையில் அந்த வேதியர்கள் மீண்டும் வேதமோதத் தொடங்கி விட்ட வாக்கியம் தோன்ருது மயங்கி நிற்க, ஆழ்வார் அது கண்டு கறுப்பு நெற்களைக் கையுகிராலே இடந்துபோட, அப்பொருளுள்ள வேத வாக்கியம் அவர்கட்குத் தோன்றிற்று: அதாவது "க்ருஷ்ணுநாம் வ்ரீஹீணும் நகநிர்ப்பிந்நம்" என்பது. உடனே அவர்கள் ப்ரதக்ஷிண ப்ரணுமாதிகளால் இவரை உபசரித்து க்ருதார்த்தராயினர் என்பது சரித்திரவரலாறு. இங்ஙனமாக, வாய் திறவாமலே இங்கிதத்தினுல் காட்டினது பற்றி

ஊமையோ என்றது. சொன்ன சொற்களைச் செவியேற்காதவர் செவிடர்; அந்தச் செவிடும் இவரது சரிதையில் ப்ரஸித்தம்; முன் சொன்ன பெரும்புலியூரில் அந்தணரடிகள் யாகஞ் செய்து கொண்டிருந்த விடத்தில் இவ்வாழ்வாரை எழுந்தருள்வித்துக்கொண்டுபோய்ச் சில மஹான்கள் இவர்க்கு அக்ர பூஜை செய்விக்க, அப்போது அங்கிருந்த பல சிசுபாலஜ்ஞாதிகள் எண்ணிறந்த வசைமொழிகளை வர்ஷிக்க, அவற்றை இவ்வாழ்வார் செவியேற்காதிருந்தனர் என்ற வரலாறு காண்க. [அனந்தலோ] தூக்கமோ என்றபடி பரமைகாந்திகட்குத் தூக்கமாவது பாஹ்ய விஷயங்களிற் சிறிதும் நெஞ்சு செல்லா திருக்கப் பெறுதலே. "உன்னைத் தெரித் தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றும் *தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாமமேத்தப் பொழுதெனக்கு மற்றதுவே போதும்* என்று மருளிச்செய்யு மிவ்வாழ்வார்க்கு இந்த நிலைமையே அனந்தலாகும். [ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாரோ] மற்றை யாழ்வார்களிற் காட்டிலும் இவ்வாழ்வாருடைய பரமைகாந்தித்வம் மிக விலக்ஷணம் என்பது இங்கு அறியத்தக்கது. "பிதிரு மனமிலேன் பிஞ்ஞகன் றன்னோடெதிர்வன், அவனெனக்கு நேரான்" என்னும்படியான திருநாவீறு இவர்க்கே அஸாதாரணமன்றோ! இதுதான் பெருந்துயில்: எம்பெருமானை யொழிந்த மற்றையோரைக் கண்கொண்டு பாராமையிற் பெருமை. [மாமாயன்] "மாயமென்ன மாயமே" என்றும், "மாயமாய மாக்கினாய் உன் மாயமுற்று மாயமே" என்றும் பலகாலும் எம்பெருமானது மாமாயங்களைப் பேசுகிறவர் இவ்வாழ்வார். [மாதவன்] "மாதவனை ஏத்தாதார் ஈனவரே" என்றவரும் இவ்வாழ்வாரே. "திருவிலாத்தேவரைத் தேறேன்மின் தேவு" என்றதுங் காணலாம். [வைகுந்தன்] "வைகுந்தச் செல்வனார் சேவடி மேல் பாட்டு" என்றவர் இவ்வாழ்வாரே. வைகுந்தனது சேவடிமேல் தாம் பாசுரம் பாடினவராக சொல்லிக் கொண்டார். ஆகவே, மாமாயன் மாதவன், வைகுந்தனென்ற திருநாமங்கள் இவ்வாழ்வார்க்குப் பரமபோக்யங்களென்பது ஸூசிதம்.

5. **நோற்றுச் சுவர்க்கம்**—திருமழிசை யாழ்வார்க்கு அடுத்த முந்தினவரான பேயாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. ஓடித்திரியும் யோகிகளாய் ஒருவரோடு ஒருவர் சேராமல் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த பொய்கையார் பூதத்தார் பேயார் இம்மூவரையும் ஒன்று சேர்த்து அநுபவிக்கக் கருதிய எம்பெருமான் ஒரு பெருமழையை வியாஜமாக்கித் திருக்கோவலிடைகழியில் நெருக்கி யநுபவித்தானென்பது வரலாற்றின் சுருக்கம். இப்பேயாழ்வாரைப் பற்றித் திருவரங்கத்தமுதனார் நூற்றந்தாதியில் அருளிச் செய்யுமிடத்து "மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள் தன்னொடுமாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவன்" என்றார். பொய்கையாரும் பூதத்தாரும் இருவிளக்கேற்றியிருளையகற்ற இவ்வாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கிப் பலாநுபவம் செய்தருளினார் என்பர் ஆன்றோர். அவ்வர்த்தமே யிங்கு முதலடியிற் பொலியும். நோற்று—மற்றை யிரண்டு ஆழ்வார்களும் விளக்கேற்றுகையாகிற உபாயாநுஷ்டானஞ் செய்யவே என்றபடி. சுவர்க்கமாவது ஆனந்தாநுபவம். "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோயஸ் த்வயாவிநா" என்று ஸ்ரீராமாயணத்தில் பிராட்டி அருளிச் செய்ததுங் காண்க. "வாசல் திறவாதார்" என்றது பேயாழ்வார்க்கு மிகவும் பொருத்தமான லிங்கம். திருக்கோவலிடைகழியில் பொய்கையார் முன்னே புகுந்து தாளிட்டுக் கொண்டார். பிறகு பூதத்தார் அங்குவர அவர்க்குப் பொய்கையார் வாசல் திறந்தார். பிறகு வந்து சேர்ந்த பேயார்க்குப் பூதத்தார் வாசல் திறந்தார். இப் பேயார்க்குப் பிறகு ஒருவரும் வந்து புகாமையினால் வாசல் திறக்க வேண்டிற்றிலை. ஆகவே வாசல் திறவாதார் என்றது பேயாழ்வார்க்கு மிகப் பொருத்தமாக அமைந்த குறிப்பு. [நாற்றத்துழாய் முடி நாராயணன்] இவ்வாழ்வாருடைய பாசுரங்கள் திருத்துழாய் மயமாகவே யிருக்கும். *திருக்கண்டேனுக்கு அடுத்த பாசுரம் "பொன்தோய் வரை மார்பில் பூந்துழாய்" என்பது. முடிவு பாசுரத்திலும் "தண்டுழாய்த்தார் வாழ்வரை மார்பன்" என்றார். இடையிலும் பல பாசுரங்கள் காண்க. ஒன்பதாவது பாசுரத்தில் [நாமம் பல சொல்லி யென்பதில்] நாராயணனையும் திருத்துழாயையும் கண்ணனையும் சேர்த்துப் பாடினார் பேயார். இதுவும் ஒரு சிறந்தபொருத்தம். "காண்கா ணெனவிரும்புங் கண்கள்" என்று ஒரு நொடிப்பொழுதும் கண்மூடியிருக்க மாட்டாமையைச் சொல்லிக் கொண்ட நீர் கும்பகர்ணனுக்கும்

மேலாக இன்னமும் துயில் கொள்ளல் தகுதியோ என்கிறாள் பண்டொருநாளென்று தொடங்கி; அன்றிக்கே கூற்றத்தின் வாய் வீழ்ந்த—தெற்கு திசையை அடைந்த, கும்பகரணனும்—கும்பத்தை காரணமாக வுடைய (கும்பத்திலிருந்து பிறந்த) அகத்தியரும் தமிழிலே தேவரீரிடம் தோற்று என்றுமாம். அதனாலன்றோ அமுதனாரும் இவரை தமிழ்த்தலைவன் என்றார். இப்பாட்டில் நட்ட நடுவில் இராமபிரானுடைய திவ்ய சரித்திரமொன்றை ஆண்டாள் அமைத்தது பேயாழ்வாருடைய திருவந்தாதியில் நட்ட நடுவில் "அவனே—இலங்காபுர மெரித்தானெய்து" என்றும் "எய்ததுவும் தென்னிலங்கைக் கோன்வீழ" என்றும் அருளிச்செய்தமைக்கு நன்கு ஒக்கும். திருமழிசையாழ்வாரை யுணர்த்தின கீழ்ப்பாட்டில் அனந்தலோ என்று வெறும் அனந்தலே சொல்லிற்று. இப்பாட்டில் ஆற்றவனந்தலுடையாய்! என்கிறது. மழிசையர்கோனுக்கும்-இவ்வாழ்வார் ஆசாரியராதலால் விசேஷணமிட்டபடி. அனந்தல் என்பது ஹேயமான உறக்கமன்று சொல்லுகிறது. "உரோவிந்யஸ்த ஹஸ்தாஸ்தே நித்ராயந்தே ஸுநிர்ப்பரா:—" என்று பகவச் சாஸ்திரங்களிற் கொண்டாடப்பட்ட 'அனந்தல்' பரமைகாந்தித்வ ஸீமா பூமியைக் காட்டுமது. [அருங்கலமே!] எம்பெருமானது திருவருளை மிக அருமையாகப் பெற்ற ஸத்பாத்ரமே! என்றபடி. பாசுரம் தொடங்கும்போதே "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று ஆனந்தமாகத் தொடங்கப்பெற்ற பகவத் பரமக்ருபா பாத்ரபூதர் மற்றொரு ஆழ்வாரில்லையே. [தேற்றமாய் வந்து திற] உம்முடைய திருநாமமே பேயார்; பேய்த்தனமாக வாராமல் தேறிவந்து திறவும் என்கிறாள்.

6. **கற்றுக் கறவை.** பேயார்க்கு அடுத்த முந்தினவரான பூதத்தாரை யுணர்த்தும் பாசுரமிது., இதில், "குற்ற மொன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே!" என்ற விளி பூதத்தார்க்கு நன்கு பொருந்தும். பல பொருள்களையுடையதான கோ என்னும் சொல் கோதா என்ற விடத்திற்போல ஸ்ரீ ஸூக்தியைச் சொல்லுகிறதிங்கு. கோவலர்—ஸ்ரீ ஸூக்திகளை யருளவல்லவர்களான ஆழ்வார்கள். "குற்றமொன்றில்லாத" என்ற விசேடணம் முதலாழ்வார்கள் மூவர்க்கே பொருந்தும்; யோநிஜத்வமாகிற வொரு குற்றம் மற்றை யாழ்வார்களுக்குண்டு. அக்குற்றமொன்றும் இல்லாத கோவலர்—முதலாழ்வார்கள்; அவர்களுள் பொற்கொடியே!—"கோல்தேடியோடும் கொழுந்ததே போன்றதே மால்தேடி யோடும் மனம்" என்கிற பாசுரத்தினால் தம்மை ஒரு கொடியாகச் சொல்லிக் கொண்டவர் பூதத்தாழ்வாரே யாவர். எம்பெருமானாகிற உபக்நத்தைத் தேடிச் செல்லுகின்ற கொடிபோல்வேன் நான் என்றவர் இவரேயிறே. "கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து" என்றது முதலாழ்வார் மூவர்க்கும் பொதுவான வாசகம். கற்றுக் கறவை—கன்றுநிய கறவை. (கறவை யென்பதனால் ஸ்ரீ ஸூக்தி விவக்ஷிதம்) மற்றை யாழ்வார்கள் பெரிய பெரிய பாசுரங்களை யளித்தார்கள். முதலாழ்வார்கள் அங்ஙனன்றிக்கே வெண்பாவாகிய மிகச் சிறிய பாசுரங்களை யளித்தார்கள். பொய்கை யாழ்வாரருளிய திருவந்தாதி கறவைக் கணம்; பூதத்தாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள்; பேயாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள் பல. க்ரமேண ஏகவசந த்விவசந பஹுவசநங்கள் இணங்கின அழகு காண்க. [செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்] தேசமெங்கும் திரிந்து பகவத் விரோதிகளை நிரஸிக்க வேணுமென்கிற அர்த்தத்தை "எண்டிசையும் பேர்த்த கரம் நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்ற பாசுரத்தினால் வெளியிட்டவர் இவ்வாழ்வாரே. "புற்றரவல்குல்" என்பது இடையழகை வருணிப்பதாகும். ஸ்வாபதேசத்தில் இடையழகாவது பக்தியின் பெருமை. ஞானம் பக்தி விரக்தி என்ற மூன்றில் பக்தியானது இடைப்பட்டதாதலால் இடையழகென்பது பக்தியின் அழகேயாகும். இவ்வாழ்வார் தம்முடைய திருவந்தாதியை முடிக்குமிடத்து "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்றே முடித்தார். இதனால் இவரது இடையழகு நன்கு வெளிப்பட்டதாயிற்று. அன்பிலே தொடங்கி அன்பிலே தலைக் கட்டினார். புனமயிலே! என்ற விளியும் இவர்க்கு அழகாகப் பொருந்தும். பொழிலிடத்தே வாழும் மயில்; இவ்வாழ்வார் தோன்றிய தலமோ திருக்கடல்மல்லை; அதனைப் பாடின கவியன "கடிபொழில் சூழ்கடல் மல்லை" என்றே பன்முறையும் பாடினர். மயில் மேகத்தைக் காண்பதிலே மிக்க குதூஹல முடைத்தாதலால், மேகம் நீர்பருக வருமிடமான கடற்கரையிலே மயில்கள் மகிழ்ந்து நிற்கும். இவ்வாழ்வார் நின்றவிடமும் கடற்கரை

யிலே யிறே. [சுற்றத்துத் தோழிமாரித்யாதி.] இவர்க்குப் பொய்கையாரும் பேயாரும் சுற்றத்தவர்கள்; மற்றையாழ்வார்கள் தோழிமார். [முகில் வண்ணன் பேர் பாட.] முந்துற முன்னம் முகில் வண்ணன் பேர் பாடினவர் இவ்வாழ்வாரேயாவர்; "உலகேழும் முற்றும் விழுங்கும் முகில்வண்ணன்—ஏத்துமென்னெஞ்சு" என்ற இவர் பாசுரம் காண்க. புனமயில் முகில் வண்ணனைத் தானே பாடும்.

7. கனைத்திளங் கற்றெருமை பூதத்தாழ்வார்க்கு அடுத்து முந்தினவரான பொய்கையாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. தங்காய்! என்ற விளி இவர்க்கு நன்கு பொருந்தும். உலகில் தங்கையென்று ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் தமக்கை யென்று மூதேவியையும் வழங்குவார்கள். 'சேட்டை தம் மடியகத்து' என்ற திருமாலைப் பாசுரத்தில் தமக்கைக்கு வாசகமான ஜ்யேஷ்டா என்ற சொல்லால் மூதேவியைக் குறித்தமை காண்க. ஸ்ரீ மஹாலக்ஷ்மி தாமரை மலரிற் பிறந்தவள். 'வனச மலர்க்கருவதனில் வந்தமைந்தான் வாழியே' என்கிறபடியே பொய்கையாழ்வாரும் தாமரைப்பூவில் தோன்றியவர். இந்த வொற்றுமைநயம் பற்றித் தங்காய்! என விளிக்கத் தகுதியுடையாரிவ்வாழ்வார். 'நனைத்தில்லஞ் சேறாக்கும்' என்ற விசேடணமும் இவர்க்கு வெகு நேர்த்தியாகப் பொருந்தும். பொய்கையாழ்வார் "பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சி யழுதேன்" என்று தாமே பேசினபடியே அழுதவராதலால் கண்ணநீர் கொண்டு நனைத்தில்லம் சேறாக்கினரென்க. இவருடைய இல்லமான பொய்கை பெரும்பாலும் சேறாகவேயிருக்கும்.

[கனைத்து] முதன் முதலாகப் பேசத்தொடங்கும்போது கனைப்பது இயல்பு. பொய்கையார்க்கு முன்னம் பேசினவர்கள் யாருமில்லை. இவரே முதன் முதலாகப் பேசத் தொடங்கினவரென்பது இவ்வினையெச்சத்தினால் தோற்றுவிக்கப்படும். [இளங் கற்றெருமை] எருமை யென்றால் மஹிஷீ; லக்ஷித லக்ஷணாக்ரமத்தால் தேவ தேவ திவ்ய மஹிஷீ என்றவாறு. எம்பெருமானுக்கு திவ்ய மஹிஷியான பிராட்டியை யொப்பவர் இவ்வாழ்வார் என்பது ஸூசனை. "இளங் கன்றுகளையுடைய" என்று விசேஷண மிட்டதனால், மற்றை யாழ்வார்களுள் முதல்வரிவரென்பது ஸூசிதம். [கன்றுக்கிரங்கி] இவர் ஸ்ரீ ஸூக்தியருளிச் செய்யத் தொடங்கினது கன்றுகளான நம்போல்வார் பக்கலிலுள்ள பரம க்ருபையாலென்க. [நினைத்து முலைவழியே நின்று பால்சோர.] பகவத் குணங்களை நினைத்தவாறே அந்த நினைவுதானே ஊற்றாகப் பால் போன்ற ஸ்ரீஸூக்திகள் பெருகப் புக்கன என்றபடி [பனித் தலைவீழ நின்வாசல் கடைபற்றி] இவர் பொய்கையில் தோன்றினவராதலால் இவரது வாசற் கடையைப் பற்றுவார்க்குப் பனித்தலை வீழ ப்ராப்தமேயாகுமிறே. [சினத்தினா லித்யாதி] இது ஸ்ரீராம குண கீர்த்தனம். மஹர்ஷிகளின் ஞானக் கண்ணுக்கும் இலக்காகாத வொரு ஸ்ரீராம சரிதம் இவ்வாழ்வாருடைய அகக்கண்ணுக்கு இலக்கானமை "பூமேய மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடியைப், பாதமத்தாலெண்ணினான் பண்பு." என்ற இவரது பாசுரத்திற்பொலியும். அதில் "நாமேயறிகிற்போம் நன்னெஞ்சே!" என்றதற்குப் பொருந்த "மனத்துக் கினியானை" என்றாள். [இனித்தானெழுந்திராய்] "பழுதே பல பகலும்" என்கிற பாசுரம் பேசின பிறகுங்கூட உறங்கலாமோ! என்கை. முமுக்ஷுப்படியில் "பழுதே பல பகலும் போயினவென்று இறந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை" என்ற ஸ்ரீஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம். [அனைத்தில்லத்தாரு மறிந்து] "அறியுமுலகெல்லாம் யானேயு மல்லேன்" என்ற இவ்வாழ்வாரது பாசுரத்தை அழகாக நினைப்பூட்டுகிறபடி காண்மின்.

இப்பாசுரத்தோடு ஆண்டாளுக்கு முந்தின ஆழ்வார்களை யெல்லாம் உணர்த்திற்றாயிற்று "ஆழ்வார்கள் பன்னிருவர்" என்று முள்ள ஸம்ப்ரதாயப் படிக்கு ஸ்ரீ மதுரகவிகளும் ஆண்டாளும் ஆழ்வார் கோஷ்டியில் சேர்ந்தவர்களாதலால் இவ்விருவரையு முணர்த்துவதும் இப்பாட்டிலேயே அறியக் கிடக்கிறது. எங்ஙனே யென்னில்; நற்செல்வன் தங்காய்! என்றது நற்செல்வன் தங்கையே! என்று பொருள்படுதலால் நற்செல்வன் தன்னுடைய கையாக இருப்பவனே! என்றபடியாகும். இங்கு நற்செல்வனென்பது நம்மாழ்வாரை. அவர் திருவாய்மொழி அருளிச்செய்கையில் மதுரகவிகள் அவருடைய கையின் ஸ்தாநீயராயிருந்து பட்டோலை கொண்டாராதலால் இந்த விளி மதுரகவிகட்குப் பொருந்தும்.

இனி நற்செல்வனென்று எம்பெருமானுரைச் சொல்லிற்றாகி அவருடைய தங்கையென்று ஆண்டாளையுஞ் சொல்லக் குறையில்லை. "கோதற்ற ஞானத்திருப்பாவை பாடிய பாவை தங்கை" என்றும், "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்றும் முன்னவை காண்க. ஆண்டாள் தன்னைத் தானே உணர்த்திக்கொள்ளுகை பொருந்துமோவென்று விரஸமாக வினவுவார்க்கு நாம் விடையளிக்கவல்லோமல்லோம். சொற்சுவை அமைந்திருக்கு மழகை அநுபவித்துப் போருகிறோ மத்தனை.

இனி மேல் மூன்று பாசுரங்கள் ஆண்டாளுக்குப் பிறகு தோன்றிய மூன்று ஆழ்வார்களை அடைவே உணர்த்துவன. பிந்திய ஆழ்வார்களின் படிகள் முந்தியே ஆண்டாளுக்கு எங்ஙனே தெரியுமென்று சிலர் சங்கிப்பரேல், "விதயச்ச வைதிகாஸ்த்வதீய கம்பீரமநோநுஸாரிண:" என்ற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியையும் "ருஷீணாம் புநராத்யாநாம் வாசமர்த்தோநுதாவதி" என்ற பவபூதி பாஷிதத்தையும் அன்னவர்கட்கு நினைப்பூட்டுவோம்.

8. புள்ளின்வாய் கீண்டானை.—இது ஆண்டாளுக்கு அடுத்த தொண்டரடிப்பொடியாழ்வாரை யுணர்த்தும் பாசுரம். [போது அரிக் கண்ணினாய்] புஷ்பங்களை ஹரிப்பதிலேயே த்ருஷ்டியைச் செலுத்துபவரே! என்றபடி. புஷ்ப கைங்கர்யபரரிறே இவ்வாழ்வார். "துளபத்தொண்டாய தொல் சீர்த் தொண்டரடிப்பொடி" "தொடையொத்த துளவமுங் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி" என்றவை காண்க. பாவாய்! என்ற விளியும் இவர்க்கு நன்கு பொருந்தும். பதிவ்ரதா சிரோமணியைப் பாவை யென்பர். இவ்வாழ்வார் அரங்கனொருவனுக்கே வாழ்கைப்பட்டு வேறொரு திருப்பதி யெம்பெருமானை நெஞ்சிலும் நினையாதவராதலால் இவ்வகையான கற்புச் சிறப்பு குறிக்கொள்ளத்தக்கது. [நன்னாளால்] 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்' என்ற திருவாக்கிலேயே இச்சொல்லும் வருகின்றது. தொண்டரடிப் பொடிகள் திருவவதரித்தது மார்கழித்திங்களே யாதலால் நன்னாளென்னத் தட்டுண்டோ? [கள்ளந் தவிர்ந்து] 'சூதனாய்க் கள்வனாகி' என்றும் 'கள்ளமே காதல் செய்து கள்ளத்தேனானுந் தொண்டாய்' என்றும் பலகாலும் தமது கள்ளத்தைப் பேசிக் கொண்டாரிவ்வாழ்வார். இவரது சரிதையிலும் பொன்வட்டில் விஷயமான கள்ளம் அடிபட்டுக்கிடக்கிறது. அது தவிர்ந்து பகவத் கோஷ்டியில் கலந்தபடியை ஈற்றடி தெரிவிக்கின்றது. பெரியாழ்வார் போலவே இவ்வாழ்வாரும் பெரும் பாலும் பூம்பொழில் வாஸமுடையவராதலால் அவ்விடத்து அடையாளமாகப் புள்ளுஞ் சிலம்பின காண் என்பது இப்பாட்டிலும் புகுந்தது. [குள்ளக் குளிரவித்யாதி.] நீராட்டம் முதலிய நித்ய கர்மாநுஷ்டானங்களை தவிர்ந்து சிலகாலம் பள்ளிக்கிடந்தமை இவ்வாழ்வாரது சரிதையிற் காணத்தக்கது. புள்ளின்வாய் கீண்டானை யென்று தொடங்கிக் கண்ணபிரானுடையவும் இராமபிரானுடையவும் கீர்த்திமை பாடினபடி சொல்லுகிறது. இவ்வாழ்வார் திருமாலையின் முடிவில் 'வளவெழுந்தவளாட மதுரைமா நகரந்தன்னுள், கவளமால் யானை கொன்ற கண்ணனை யரங்கமாலை' என்று கண்ணபிரானுடைய கீர்த்திமையையும், திருப்பள்ளியெழுச்சியில் 'மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய வடுதிறலயோத்தி யெம்மரசே யரங்கத்தம்மா!' என்று இராமபிரானுடைய கீர்த்திமையும் பாடினமை யுணர்க. 'பிள்ளைகளெல்லாரும்' என்றது ஆண்டாள் தனக்கு முந்தின ஆழ்வார்களெல்லாரையும் சொன்னபடி. "இரவியர் மணிநெடும்" அந்தரத்தமரர்கள் பாசுரங்கள் காண்க.

9. உங்கள் புழைக்கடை.—தொண்டரடிப்பொடிகளுக்கு அடுத்த திருப்பாணாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. இதில், நங்காய்! நாணாதாய்! நாவுடையாய்! என்ற மூன்று விளிகளும் பாண்பெருமாளுக்கு நன்கு பொருந்தும். நங்கை யென்பது குணபூர்த்தியைச் சொல்லுகிறது. லோக ஸாரங்கமஹா முனிகள் வந்து என் தோளின் மீது ஏறிக்கொள்ளுமென்ன, அத்யந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை நினைத்து அதற்கு உடன்பட்டமை குணபூர்த்தி, அங்ஙனம் அந்தணர் தலைவரது தோளின்மீது ஏறியிருக்கச் செய்தேயும் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் 'அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்' என்றே பேசினவராதலால் நாணாதவர். (நாண்—அஹங்காரம்) 'பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்' என்று தேசிகன் பணித்தபடி ஸகல வேதார்த்தங்களையும் பத்து பாசுரத்திலே அடக்கிப் பேசின பரம

சதுரராதலால் நாவுடையார். "கைவினர் சுரிசங்கனலாழியர்" என்று சங்கொடு சக்கரமேந்தின வழகை யநுபவித்தமை பற்றியும் "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்" என்று கண்ணழகில் ஈடுபட்டுப் பேசினமை பற்றியும் "சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன் பங்கயக் கண்ணனைப் பாட" என்றாள். இவ்வாழ்வார் தமது சாதி நிலைமைக்கு ஏற்ப வாழ்ந்த விடத்தைக்கருதி உங்கள் புழைக்கடை யித்யாதி அருளிச் செய்யப்பட்டது. இவரது சரிதையில் ஸம்பந்தப்பட்ட லோகஸாரங்க மஹாமுனிகளின் தன்மையைக் காட்டுவது போலுள்ளது செங்கற் பொடிக் கூறை யித்யாதி. 'எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும் நங்காய்' என்பதில் ஒரு அழகிய பொருள் தொனிக்கும். (அதாவது—) எழுப்புவதாவது—தூக்கிக் கொள்வது. எங்களை என்றது பாகவதர்களை யென்றபடி. பாண்பெருமாளே! உமதுடைய முதற் பாசுரத்தில் "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்" என்ற சொல் நயத்தை நோக்குங்கால் பாகவதர்களை நீர் தோளில் தூக்கிக் கொண்டாடுபவர் போலத் தெரிகின்றது. உமது கதையோ அப்படியில்லை. மஹாபாகவதரான லோகஸாரங்க மஹாமுனியின் தோளின் மீதேறி நீர் இருந்ததாகவுள்ளது. ஆகவே, முந்துறமுன்னம் பாகவத சேஷத்வத்தை நீர் சொல்லிக் கொண்டது வாய்பேசு மத்தனையே போலும் என்று விநோதமாகக் கூறுகிறபடி.

10. **எல்லேயிளங்கிளியே.**—பாண்பெருமாளுக்கு அடுத்தவரும் ஸர்வ கநிஷ்டருமான திருமங்கையாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. இவ்வாழ்வார் இரண்டு ஆய்ச்சிகளுக்கு பரஸ்பர ஸம்வாதமாக *மானமரு மென்னோக்கி* என்றொருபதிகம் அருளிச் செய்தவராதலால் இவரை யுணர்த்தும் பாசுரம் பரஸ்பர ஸம்வாதரூபமாகவே அமைக்கப்பட்டது. 'கிளிபோல மிழற்றி நடந்து' மென்கிளிபோல மிக மிழற்று மென்பேதையே' என்று பல பாசுரங்களில் இவர் தம்மைக் கிளியாகச் சொல்லிக்கொண்டவராதலால் கிளியே! என்ற விளி இவர்க்குப் பொருந்தும். அன்றியும், சொல்லிற்றையே சொல்லுவது கிளியின் இயல்பு. அதுபோல இவர் 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கம் கூற' என்றபடி நம்மாழ்வார் ஸ்ரீ ஸூக்திகளையநுசரித்தே அருளிச் செய்தவராதலாலும் கிளியென்றது. ஆழ்வார்களில் கடைக்குட்டியாதலால் இளங்கிளியே என்றது. இரண்டாமடி திருமங்கையாழ்வாருடைய விடையளிப்பு [வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன்வாயறிதும்.] இது கலியனை நோக்கி ஆண்டாள் கூறுவது 'வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே' என்று நீர் மிகக் கடினமாகப் பேச வல்லீரென்பது எனக்கு, [பண்டே—நீர் அவதரித்துப் பாசுரம் பேசுவதற்கு முன்னமே] தெரியுங்காணும் என்றாள். அது கேட்ட கலியன் வல்லீர்கள் நீங்களே—'கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும், அள்ளிப்பறித்திட்டவன் மார்பிலெறிந்து என்னழலைத் தீர்வனே' என்று அறவெட்டிதாகச் சொன்ன உன் பேச்சு கடினமா? என் பேச்சு கடினமா? நீயே பார்க்கலாம்—என்றார். என்றவுடனே *நண்ணுத்வாளவுணர்* *கண்சோரவெங்குருதி* முதலிய திருமொழிகளில் தாம் அநுஸந்தித்த பாகவத சேஷத்வ காஷ்டையை நினைத்து *நானே தானாயிடுக* என்றார். "உனக்கென்ன வேறுடையை" என்றது திருமங்கையாழ்வார்க்கு அஸாதாரணமான திருமடல் திவ்யப்ரபந்த வக்த்ருத்வத்தை யுளப்படுத்தியதாகும். [எல்லாரும் போந்தாரோ இத்யாதி] கலியனுக்கு முன்னமே மற்றுள்ள ஆழ்வார்கள் அவதரித்து பன்னிருவர் என்கிற ஸங்க்யை இவரோடு நிரம்பிற்று என்று தெரிவிக்கப்பட்டது. [வல் ஆனை கொன்றானை—மாயனைப் பாட.] ஆனையைக் கொன்ற விஷயத்தை ஒரு ஆச்சரியமாக எடுத்துப் பேசினவர் கலியன். "ஆவரிவை செய்தறிவார் அஞ்சனமாமலை போலே" என்ற பெரிய திருமொழி காண்க. அடிக்கடி கலியன் வாய்வெருவதும் வல்லானைகொன்ற வரலாற்றையே; 'கவளயானைகொம் பொசித்த கண்ணனென்னும்" இத்யாதிகள் காண்க. [மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனைப் பாட] எம்பெருமான் தன் திறத்தில் மாறு செய்பவர்களது செருக்கை வெகு ஆச்சரியமாக அடக்குவன் என்பதைக் காட்டுகின்ற சரிதைகளுள் கோவர்த்த நோத்தரண கதை மிகச் சிறந்தது. மாறுசெய்த இந்திரனுக்கு ஒரு தீங்கு மிழைக்காமலே கண்ணன் அவனது கொழுப்பையடக்கினனிறே. இக்கதையிலே கலியன் மிக்க ஊற்றமுடையவர்; பெரிய திருமொழியை முடிக்கும்போதும் "குன்றமெடுத்து ஆநிரை காத்தவன் தன்னை" என்றார்; சரமப் பிரபந்தமாகிய திருநெடுந் தாண்டகத்தை முடிக்கும்போதும் "குன்றெடுத்த தோளினானை" என்றே தலைக்கட்டினார்.

ஆக இங்ஙனேயுள்ள பலவகைப் பொருத்தங்களினால் ஆண்டாள் ஒவ்வொரு பாசுரத்தாலும் ஒவ்வொரு திருத் தகப்பனாரை யுணர்த்தினளென்று நிர்வஹிக்கும்படி. இப்பொருத்தங்களை இன்னமும் விவரிக்கப் புகுந்தால் "பன்னியுரைக்குங்கால் பாரதமாம்" என்ற கணக்கிலே விரிவு பெரிதுடையதாகுமென்று ஸம்க்ஷிப்தமாயிற்று.

காஞ்சீவாதிபயங்கரவம்சீயாண்ணங்கரார்ய ஸங்கலிதா |
கோதாஸூக்திரஹஸ்ய ப்ரகாசிகைஷா ஸதாம் முதே பூயாத் ||

———

ஸ்ரீரஸ்து.

## பெரியாழ்வார் திருமொழியிலும் நாச்சியார் திருமொழியிலும்

# ரஸ்யரஹஸ்யார்த்தங்களிரண்டு

### ஆண்டாள் சரிதையைப் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் சரிதையை ஆண்டாளும் காட்டியிருப்பது.

ஆண்டாளுக்குச் சூடிக்கொடுத்த நாச்சியாரென்று திருநாமம் ப்ரஸித்தமாகவுள்ளது. இந்த இதிஹாஸத்தை நாம் கர்ணபரம்பரையினாலும் குருபரம்பரா ப்ரபாவத்தினாலும் *ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகலிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியினாலும் கோதாஸ்துதியினாலும் அறியப்பெற்று வருகிறோம். இது அதிசயமன்று: பெரியாழ்வாருடைய திவ்ய ஸூக்திகொண்டே இதனை யறியப் பெறுவது விசேஷமல்லவா? அது கேளீர்.

ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் பாடலாகப் பெரியாழ்வார் திருமொழியில் ஒரு பாசுரமும், நாச்சியார் திருமொழியில் ஒரு பாசுரமுமேயுள்ளது. பெரியாழ்வாரருளிய பாசுரத்தில் ஆண்டாள் பெருமையும், ஆண்டாளருளிய பாசுரத்தில் பெரியாழ்வார் பெருமையும் [வ்யஞ்ஜநாவ்ருத்தி முறையில்] அறியக்கிடப்பது ஆய்ந்துணரத்தக்கது. பெரியாழ்வார் வில்லிபுத்தூரைப் பாடின பாசுரம் "மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்* என்பது. இங்கு கட்கண்ணோடு உட்கண்ணையும் செலுத்தவேணும். மின்னனைய நுண்ணிடையார் என்று க்ருசோதரியென்றேற்றம் பெற்ற ஸுந்தரியைச் சொல்லுகிறது; ஸாமாந்ய நாமமான விதனை விசேஷ நாமமாகக்கொண்டு ஆண்டாளே இங்கு விதக்ஷிதை யெனக்கொள்க. அவளுடைய குழல்மேல் ஒரு வண்டு நுழைந்ததாம். திருவாய்மொழியில் *தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டு* என்னப்பட்ட எம்பெருமானாகிற வண்டு காதல்கொண்டது என்கை. கூந்தலானது வண்டையிழுக்கும்: இவளோ *அலகலிநிஹிதாபிஸ் ஸ்ரக்பிராக்ருஷ்ட நாதா.* என்றபடி தான் சூடின மாலையாலே அவனை ஆகர்ஷித்தாள்.

நாச்சியார் திருமொழியில் *மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்* என்கிற பாசுரம் ஆண்டாள் வில்லிபுத்தூரைப் பாடினது இதில் ஹம்ஸவ்ருத்தாந்தம் கூறப்படுகின்றது: *அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த என்றார் கலியன். பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க அன்று அன்னமதானானே அருமறை தந்தானே* என்றார் பெரியாழ்வார் தாமே. இருள் நீங்க வேதமுரைக்கத் தோன்றிய அவதாரம் ஹம்ஸாவதாரம். *இந்தவுலகிலிருள் நீங்க வந்து உதித்த ஆழ்வார்களில் "ப்ராஹ வேதாந் அசேஷாந்" என்றும் "வேண்டிய வேதங்களோதி" என்றும் சொல்லுகிறபடியே வித்வத்ஸதஸ்ஸில் வேதமோதினது தவிர வேதப்ராதுர்ப்பாவ விசேஷமான திவ்யப்ரபந்தத்தையுமருளிச் செய்து "வேதப்பயன் கொள்ளவல்ல விட்டுசித்தன்" என்று தம்வாக்காலும் பேசிவைத்தார். ஆகவே மென்னடையன்ன மென்றது பெரியாழ்வாரை. ஆசார்ய ஹ்ருதயத்திலும் ஹம்ஸஸ்வாபதேச சூர்ணையில் பெரியாழ்வாரைக் காண்பது. அவர் விளையாடுவதாகச் சொன்னது "க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸ தர்ம: பரமோ மத:" என்கிற வசனத்தை நினைவூட்டும்.

ஆக ஆண்டாள் பெருமையைப் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் பெருமையை ஆண்டாளும் வெளியிட்டவாறு காட்டப்பட்டதாயிற்று.

———

# 1 பகவத் பாஷ்யகாரரும் திவ்யப்ரபந்தமும்

எம்பெருமானார் விஷயமாகப் பூருவர்கள் வெளியிட்ட பெருமைகளை திவ்யப்ரபந்தங்களில் பரக்க அநுபவித்தோம் இதற்கு முன்னர். அடுத்து எம்பெருமானாருடைய பெருமைகளில் ஈடு பட்டிருந்த ஸமகாலத்தவர்களான ஆசாரியர், ஸ்வாமியின் சிஷ்யர்கள் செய்யுட்களினாலும் சுலோகங்களினாலும் வெளியிட்ட வைபவங்கள் விவரிக்கப்படுகின்றன. பின்னர் திவ்யப்ரபந்தங்களை எம்பெருமானார் தமது ஸ்ரீபாஷ்யாதிகளில் ஒருங்கவிட்டதையும் மூதலிப்போம்... ..

ஆழ்வார்களருளிச்செய்த ஸகல திவ்யப் பிரபந்தங்களுக்கும் தனியன்கள் ஸ்ரீமந்நாத முனிகள் காலந்தொடங்கி பட்டர் காலம் வரையில் அவதரித்தவை, நெடுநாளாக எங்கும் ஏக ரூபமாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. சில பிரபந்தங்களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும், சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு தனியன்களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாருளிய திருவாய்மொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும், தமிழ்த் தனியன்கள் ஐந்துமாக ஆறு தனியன்கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த திருமங்கையாழ்வாருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள் மூன்றுமாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் தனியன்களில் அந்தந்த திவ்யப்பிரபந்தங்களின் பெருமை, அவற்றையருளிச்செய்தவர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன சொல்லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய திருமொழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன. எங்ஙனேயென்னில் திருவாய்மொழித் தனியன்களில்

"ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுச முனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராத வுள்ளம் பெற."

[அனந்தாழ்வான் பணித்தது]

என்கிற தனியனது எம்பெருமானார் திருவடிகளிலே பண்ணுகிறவொரு பிரார்த்தனையாக அமைந்திருக்கின்றது. இந்த வெண்பாவின் பொருளாவது, மிகச்சிறந்த கல்யாணகுணசாலியான நம்மாழ்வாருளிச்செய்த திருவாய்மொழி யாயிரத்தை நன்கு தரித்துக்கொள்ளவல்ல நெஞ்சுதன்னைப் பெறுவதற்காக, பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்! எம்பெருமானாரே! திருவாய்மொழி யாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க ஸாமர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே நோக்கிப் பிரார்த்திக்கிறது. பெரிய திருமொழித் தனியன்களுள்,

"எங்கள் கதியே யிராமாநுச முனியே!
சங்கை கெடுத்தாண்ட தவராசா!—பொஙகுபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தஙகுமனம் நீயெனக்குத் தா."

[எம்பார் பணித்தது.]

என்கிற இந்தத் தனியனும் அதேரீதியாக அமைந்திருக்கின்றது. இது எம்பெருமானாரை முன்னிலைப்படுத்தியே கூறியுள்ளது. திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமொழி யாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்தித்திருக்கிறது இதில்.

ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனத்தில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்பு வாய்ந்தவொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்றவொரு பெருமையும் அறியலாகிறது: பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்; பரமோதாரனை எம்பெருமானை நோக்கிச் செய்திருக்கலாம். ஸகலவித ஸம்பத்துக்களையும் அளிக்கவல்ல பெரியபிராட்டியாரை நோக்கிச் செய்திருக்கலாம். [இராமானுச நூற்றந்தாதியின் ஈற்றுப் பாசுரத்தோடு மிகப்பொருந்துமிது] இப்படிப்பட்ட வழிகளை விட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதனாலென்று விமர்சிக்க வேண்டியது ஆவச்யகமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச் செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருந்தன வென்று இதனால் நிஸ்ஸந்தேஹமாக அறியக்கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்க வேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே *கலியுங்கெடுங் கண்டு கொண்மினென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும், *ஆமுதல்வனிவனென்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான அநுக்ரஹாதிசயத்தினாலும் அநாயாஸமாக க்ரஹித்து ஓரிடத்திலும் ஒரு விதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ.

"வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தா யிராமா னுசன்.

[பட்டர் பணித்தது.]

முன்னம் விவரித்த *ஏய்ந்த பெருங்கீர்த்தி* தனியனுக்கடுத்ததான "வான்திகழுஞ்சோலை" என்று மேலேகாட்டின தனியனில் "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வரென்றும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச்செய்தார்களென்றால் திவ்யப்பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்யப்ரபந்தங்களைக்கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்தருளினர். வியாக்கியானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினர். ஆங்காங்கு அருமை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினர். திவ்ய தேசங்களில் அருளிச் செயல் பிரசாரங்களை ப்ரபலப்படுத்தியருளினர். இவ்வண்ணமாகச் செய்தருளின செயல்களைக்கொண்டே "மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு ச்ரத்தை கொண்டருளி யிராவிடில் திவ்யப்ரபந்தங்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் காலத்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத படிக்கு ஸ்வாமி யெம்பெருமானார் செய்தருளின சேமக்காப்பு வாமம கோசரம். "ஸர்வதேசதசாகாலேஷு...ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்...திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ" என்கிற ச்லோகத்தை நாடு நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து

வருவதனால் அந்த ராமானுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப்பிரபந்த விஷயமேயல்லது வேறு விஷயமன்றென்பது நன்கு விளங்கும்.

எம்பெருமானாரைப் பற்றின வொரு ச்லோகரத்நம் ஈடுமுப்பத்தாறுயிரப்படியின் அடையவளைந்தானரும்பத வுரை முதலான க்ரந்தங்களில் காணப்படுகிறது; அதாவது—

"புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதிசதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுளதரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிது மலம் யுக்திபிரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர:." என்பதாம்.

இந்த ச்லோகத்தின் கருத்தாவது — உபநிஷத்துக்களின் பொருள்களை முதன்முதலாக வியாஸ பகவான் சாரீரக மீமாம்ஸையென்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்திலே தொகுத்தார்; அந்த வியாஸர் தாமே மீண்டும் வகுளாபரணப் பெருமாளாக [நம்மாழ்வாராக] வடிவெடுத்து செவிக்கினிய செஞ்சொற்களாலே அந்த ப்ரஹ்ம ஸூத்ரத்தை விவரித்தார். இவ்வுபய திவ்ய க்ரந்தங்களையும் பொருத்தமாக ஸமந்வயப் படுத்தி நிர்வஹிக்க அவரே மீண்டும் ஸ்வாமியெம்பெருமானாராகத் திருவவதரித்தார்—என்பதாம். இந்த ச்லோகம் எம்பார் அருளிச் செய்ததாகவும் முதலியாண்டானருளிச் செய்ததாகவும் சொல்லப்பட்டு வருகிறது. ச்லோகமோ கம்பீரமானது; விஷயமோ யதார்த்தமானது. இது கொண்டே ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவர்" என்றருளிச்செய்யப்பட்டது.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனிக்கப்பெற்றவர்கள் ஸ்ரீமதுபயவே. என்கிற விருதை வஹிப்பது மாத்திரம் போராது; உபய வேதாந்தங்களையும் ஸமரூபமாகப் பரிசீலனை செய்து உபய வேதாந்த திவ்யார்த்தங்களையும் தாமநுபவித்துப் பிறரையும் அநுபவிக்கச் செய்யவேணும்.

வேதோத்தம்ஸ குஹாவிஹாரபடுநா ஸ்ரீசைலச்ருங்கோல்லஸந்-
மாயா கேஸரி மாநிதேந கஹநந்யாயாடவீசாரிணா,
கம்பீரேண பராத்மபேதநமஹாநாதேந நாதேந மே
குப்தோஹம் யதிஸார்வ பௌமஹரிணா வர்த்தே ப்ருசம் நிர்ப்பய:

இந்த ச்லோகம் எம்பார் அருளிச் செய்த முக்தக ச்லோகங்களில் சிகரமாக விளங்குமது. ஸ்ரீபெரும்பூதூரி லெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ எம்பார்ஜீயர் ஸ்வாமி பணித்ததாகச் சிலர் கருதியிருப்பதுண்டு. அவர் கையாண்டதத்தனை. இந்த சுலோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது. இதனைச்சிறிது விவரிக்கிறோம்.

இராமானுச நூற்றந்தாதியில் "கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப்பெருமான், ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளந் தடித்து, அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்" என்று எம்பெருமானார் சீரிய சிங்கமாக அருளிச் செய்யப்பட்டுள்ளார்; அதனையடியொற்றி இந்த சுலோகத்திலும் ஸ்வாமி ஸிம்ஹமாக ரூபிக்கப்படுகிறார். ஸிம்ஹத்தோடே ஸ்வாமிக்கு ஸாம்யம் ஐந்து விசேஷணங்களினால் அற்புதமாக நிர்வஹிக்கப்படுகிறது. [வேதோத்தம்ஸ குஹா விஹார படுநா] "மலைமுழஞ்சில் மன்னிக்கிடந் துறங்கும் சீரிய சிங்கம்" என்ற திருப்பாவையின்படியே சிங்கம் பர்வத குஹைகளில் விஹரிக்கும். ஸ்ரீராமாநுஜஸிம்ஹமோ வென்னில்; வேதங்களாகிற பர்வதங்களின் உபநிஷத் பாகமாகிற குஹைகளில் விஹரிக்கும். தைத்திரீய யஜுர் ப்ராஹ்மண-காடகத்தில் "பரதவாஜோ ஹ த்ரிபிராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்ய முவாஸ" என்று தொடங்கியுள்ள உபாக்கியானத்தில் தேவேந்திரன் பரத்வாஜ முனிவர்க்கு வேதங்களை

மலைகளாகக் காட்டினனென்று ஓதியிருக்கையாலே வேதம் மலையாகக் குறையில்லை. "தர்மஸ்ய தத்த்வம் நிஹிதம் குஹாயாம்" என்ற மஹாபாரத ச்லோகத்தின்படி தரும நுட்பம் பொதிந்திருக்குமிடம் குஹையாகக் கருதப்படுகையாலே உபநிஷத் பாகங்களை குஹையாகக் கூறினது பொருத்தம். அதிலே விஹாரம் செய்கிறார் ஸ்வாமியென்றது "க்ரீடார்த்தமபி யத் ப்ருயுஸ் ஸ தர்ம: பரமோ மத :" என்றும் "சொல்லுமவிடு சுருதியாம்" என்றும் சொல்லுகிறபடியே விளையாட்டாகச் சொல்லும் வார்த்தையும் சிறப்புற்றிருக்கு மென்றவாறு. [ஸ்ரீசைல ச்ருங்கோல்லஸ் மாயா கேஸரி மாநிதேந.] ஸிம்ஹத்தைக் கொண்டாடவல்லது ஸிம்ஹமேயாகும். அப்படியே இந்த ராமாநுஜஸிம்ஹத்தைக் கொண்டாடவல்ல ஸிம்ஹம் திருவேங்கடமுடையானாகிறஸிம்ஹமேயாம். திருமங்கையாழ்வார் "தூணுயதனூடு அரியாய் வந்து தோன்றி பேணவுவனுடலம் பிளந்திட்டாய், சேணார் திருவேங்கட மாமலைமேய, கோணாகணையாய்" என்கிற பாசுரத்தினால் திருவேங்கடமுடையானை ஸிம்ஹமாகவநுபவித்திருப்பது காண்க. அந்த ஸிம்ஹம் இந்த ஸிம்ஹத்தை பஹுமானித்த விஷயம் ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலையில் பரக்கக் காணத்தக்கது.

[கஹந ந்யாயாடவீ சாரிணு] ஸிம்ஹம் பெருங்காட்டில் ஸஞ்சரிக்குமே யொழிய நாட்டில் காணக் கிடைக்காது. இந்த யதிராஜ ஸிம்ஹமோ வென்னில்; சாஸ்த்ரீய ந்யாயங்களாகிற அடவிகளிலே ஸஞ்சரிக்குமது. [கம்பீரேண] சிங்கத்தின் தோற்றம் அதிகம்பீர மென்னுமிடம் சொல்லவேண்டா. ஸ்வாமியினுடைய காம்பீர்யம் ஸ்ரீஸூக்திகளிலும் திருவுருவத்திலுமாகும். [பராத்ம பேதநமஹா நாதேந] இந்த விசேஷணத்தில் சிலேடை அமைந்துள்ளது ஸிம்ஹ பக்ஷத்தில் "பரேஷாம் ஆத்மாநம் பிநத்தீதி பராத்ம பேதந:; ததாவித: மஹாநாதோ யஸ்ய" என்கிற வ்யுத்பத்தி கொள்ளத் தக்கது. ஸிம்ஹத்தின் பெரு முழக்கம் இதர ஜந்துக்களின் உயிரை மாய்க்கவல்ல தென்கை. இனி யதிராஜ ஸிம்ஹபக்ஷத்திலோ வென்னில், "பரச்ச ஆத்மாநச் ச பராத்மாந:; தாந் பிநத்தீதி பராத்ம பேதந:; ததாவிதோ மஹா நாதோ யஸ்ய' என்கிற வ்யுத்பத்தி கொள்ளக் கடவது. பரம புருஷனுக்கும் ஜீவாத்மாவுக்கும் ஐக்கியம் சொல்லுகிற விமத வாதிகளைக் கண்டித்து ஜீவபர பேதத்தை ஸாதிக்கவல்ல திருமிடற்றோசையை யுடையவரன்றோ பகவத் ராமாநுஜர். நூற்றந்தாதியில் "உயிர்கள் மெய்விட்டாதிப் பரனோடு ஒன்ருமென்று சொல்லுமவ்வல்ல லெல்லாம் வாதில் வென்றான் எம்மிராமானுசன் மெய்ம்மதிக் கடலே" என்றருளியது இங்கு நோக்கத்தக்கது. ஆக இத்தகைய பொருத்தங்களினால் ஸிம்ஹமென்று போற்றத் தக்க எம்பெருமானாருடைய அபிமானத்திலே ஒதுங்கிக் கிடக்கிற நாம் திர்ப்பயமான வாழ்ச்சியையுடையோம் என்றதாயிற்று.

## 2 கப்யாஸ ச்ருதியின் பொருள் விளக்கம்

கப்யாஸம் என்று சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷணமான சொல்லுக்கு மூன்று வகையான வ்யுத்பத்திகளைக் கொண்டு மூன்று அர்த்தங்கள் அவதரித்தன. அவ்வர்த்த விசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாவது—*கம்பீராம்பஸ்ஸமுத்பூத-ஸம்ருஷ்ட நாள-ரவிகரவிகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண:* என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென்கிற தண்டோடு கூடியிருப்பதும், இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ் போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. கப்யாஸம் என்கிற இச் சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப்படுகின்றன வென்று ஸந்தேஹம் எழக்கூடும்.

கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ருஷ்டநாளமாயும், ரவிகர விகஸிதமாயுமிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமையாகச் சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலே தோன்றினது திவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனாலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப்

பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார்கள். ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறுமிடங்களை ஊன்றி நோக்கினால் அபூர்வமான சில விசேஷங்கள் அறியப் பெறலாம். எம்பெருமானுடைய திருக்கண்களுக்குப் பெரும்பாலும் தாமரையை உவமை கூறுகிறார்களெனினும் அந்தத் தாமரைக்கு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமான விசேஷணமிடுகிறார்கள் ஆழ்வார்கள். அந்த விசேஷணங்களை மேல் நோக்காகப் பார்க்கும்போது விசேஷமொன்றையும் அறிய கில்லோம். எதுகையின்பம் நோக்கியும் மோனையின்பம் நோக்கியும் செய்யுளைப் பூரிக்க வேண்டியும் விசேஷணங்களையிடுகிறார்கள் என்றும் சிலர் நினைத்தொழிகிறார்கள். எம்பெருமானார் எதையும் ஆழ்ந்து நோக்குபவராதலால் அந்த விசேஷணங்களைக் கொண்டு வேதாந்தப் பொருள்களை நிர்வஹிக்கும் பரிசு நெஞ்சால் நினைப்பரிது. அதை அடைவே விவரிக்கிறேன்.

**[கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக]**—ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர் பெற்ற புண்டரீகமானது நீரில் நின்றுமுண்டாகாமல் மற்றொன்றினின்று உண்டாக ப்ரஸக்தியில்லாமையாலே "அம்பஸ்ஸமுத்பூத" என்றதன் கருத்து, நீரை விட்டுப் பிரியாமலிருக்கையைச் சொல்லுவதேயாம். "தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தை யுலர்த்துமாபோலே" என்கிற ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீஸூக்தியும், "கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி" என்கிற ப்ரமாணமும் இங்கே அநுஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரை போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. "நீரார் கமலம் போல் செங்கண்மாலென்றொருவன்" என்கிற சிறிய திருமடற் பாசுரத்திலும், "அழறலர் தாமரைக்கண்ணன்" (58) என்ற திருவிருத்தப் பாசுரத்திலும் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றிய அர்த்தமென்றே இஃது எம்பெருமானாரால் ஆதரிக்கப்பட்டது, "**நீரார் கமலம் போல்**" என்ற விடத்தில் (நீரார்) என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. "அழறலர் தாமரைக்கண்ணன்" என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் *கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—"**[அழறலர் தாமரைக்கண்ணன்]** அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்னக் கடவதிறே." இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—"அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்வி மாறாத தாமரை போன்ற கண்ணையுடையவனென்றபடி."

ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்" என்ற சிறிய திருமடற் பாசுரத்தையும், 'அழறலர் தாமரைக் கண்ணன்' என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் 'தண்பெரு நீர்த் தடந் தாமரை மலர்ந்தாலொக்குங் கண் பெருங் கண்ணன்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றியே '**கம்பீராம்பஸ் ஸமுத்பூத**' என்ற விசேஷணத்தை ஸ்வாமி, யிட்டருளினாரென்றது பொருத்தமாக முடிந்தது.

**[ஸம்ருஷ்ட நாள புண்டரீக]** நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாதது போலவே நாளத்தை விட்டு நீங்கின தாமரைக்கும் சோபையில்லாமையாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்ய வக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவிருத்தத்தில் "வன்காற்றறைய" என்கிற பாட்டிலே "எம்பிரான தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம் போல் பொலிந்தன" என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப் பட்டிருக்கிற '**மென்கால்**' என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலே யிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரை செய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ஸம்ருஷ்ட நாள) என்றருளிச் செய்யப்பட்டது.

**[ரவிகரவிகஸித புண்டரீக]** தாமரை நீரிலிருந்தாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில்தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5-4-9) "செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன்" என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக்கடவது. இவ்விடத்து ஈட்டிலும் கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளியுள்ளார். இதில் (செஞ்சுடர்த் தாமரை) என்பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் "அஞ்சுடர வெய்யோன்" என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே தததீநமென்று காட்டப்படுகிறது. ஆக ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்வியசுடரை யுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றியே "ரவிகரவிகஸித புண்டரீக" என்றருளிச் செய்தது. "செந்தண் கமலக்கண்.........சிவந்த வாயோர் கருநாயிறு அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்கும்மம்மானே" என்கிற திருவாய்மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்க வுரியது. "செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்" என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனால் அப்பாசுரத்தில் திருக்கண் ப்ரஸ்தாவ மில்லாமையுணர்க.

## 3 புண்டரீகதளாமலாயதேக்ஷண - தத்வம்

"கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ" என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு விவரணமாக ஸ்வாமியருளிச்செய்த *கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்யாதி திவ்யஸூக்தியில் "புண்டரீகதளாமலாயதேக்ஷண:" என்றருப்பது ப்ரஸித்தம். மூல ச்ருதியில் "புண்டரீகமேவம் அக்ஷிணீ" என்றிருக்கிறதேயொழிய வேறில்லை; உள்ள முலத்திற்குச் சேர "புண்டரீகேக்ஷண:" எனறிவ்வளவே அருளிச்செய்திருக்க வேண்டும்; அதிகப்படியாக மூன்று பதங்களைச் சேர்த்திருக்கிறார். (1) தள, (2) அமல, (3) ஆயத, என்னுமிந்த மூன்று சொற்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ஸ்வாமியாலருளிச் செய்யப்பட்டனவென்று விசாரம் செய்யுமளவில், ஆழ்வார்களின் திவ்ஸூக்திகளை ஆதாரமாகக் கொண்டுதானென்று நிர்ணயிக்க ப்ராப்தம்.

ஆழ்வார்கள் 'தாமரைக்கண்ணன்' என்று சிலவிடங்களிலும் "தாமரைத்தடங்கண்ணன்' "கமலத்தடங்கண்ணன்" "கமலத் தடம் பெருங்கண்ணன்" என்று பல விடங்களிலுமருளிச் செய்து போருகிறார்கள். வடமொழியிலுள்ள லகரமும் ளகரமும் தென் மொழியில் டகரமாக மாறுபடுவதுமுண்டு; "லடயோரபேத:" என்கிற நியாயம் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுமிசைந்ததே, தமிழர்கள் எழுத்துப்போலி யென்பர்கள். ஏவஞ்ச, "பத்ரம் பலாசம் சதநம் தளம் பர்ணம் சத: புமாந்" என்ற அமர கோசத்தில் படிக்கப்பட்ட தளமென்கிற வடசொல்லே தமிழில் தடமென்றாயிற்று என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானார் 'கமலத் தடங்கண்ணன்' தாமரைத் தடங்கண்ணன்' என்னுமிடங்களிலே தளமென்னும் பொருளிலே தடமெனவந்ததென்று கொண்டு "புண்டரீகதள" என்றருளிச்செய்தார். தடமென்னுஞ் சொல்லுக்கு விசாலமென்கிற பொருளும் தடாகமென்கிற பொருளும் தளமென்கிற பொருளும் ஆங்காங்கு வியாக்கியான கர்த்தாக்களால் ஆதரிக்கப்படுகின்றன. "நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போல... ...எம்பிரான் கண்ணின் கோலங்களே" என்ற திருவிருத்தப் பாசுரத்தில் தடமென்பதற்கு தடாகமென்பது பொருள்.

"கமலக்கண்ணன் ... .. அமலங்களாகவிழிக்கும்" என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை யுட்கொண்டே "புண்டரீகதளாமல...ஈக்ஷண:" என்றார் ஸ்வாமி. கீழே காட்டிய பாசுரங்களையும், "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்" என்கிற அத்விதீயமான திருப்பாணாழ்வார் பாசுரத்தையும் அநுஸந்தித்துக்கொண்டே "புண்டரீக......ஆயதேக்ஷண:" என்றார். .........

# 4 ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமம்

ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமத்திலுள்ள *அகிலபுவநஜந்மேத்யாதியான மங்களச் ச்லோகத்தில் ஆழ்வாரருளிச்செய்த மஹார்த்தங்களை வெளியிடுவதாகிய விசேஷத்தைக் கேண்மின்.

ச்லோகத்தின் முதற் பாதம் *அகிலபுவநஜந்மஸ்தேம பங்காதிலீலே* என்பது. இதில் "யதோ வா இமானி பூதாநி ஜாயந்தே" இத்யாத்யுபநிஷத்வாக்ய ஸித்தமாயும் ஜந்மாத்யதிகரண பாஷ்ய ப்ரபஞ்சிதமாயுமுள்ள ஜகஜ்ஜந்ம ஸ்திதிலயங்கள் அருளிச்செய்யப்பட்டன. ஸ்திதியாவது ரக்ஷணம்; இதுவும் முதல் பாதத்தில் சொல்லியாயிற்றென்பது ஸ்பஷ்டம். இப்படியிருக்க, *விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்று இரண்டாவது பாதம் எதற்கு? இதில் சொல்லப்படுகிற ரக்ஷணம் முதல்பாதத்திலே சொல்லப்பட்டிருக்க, ச்லோக பூரணார்த்தமாகவா இந்தத் தனிவிசேஷணம்? என்று கேள்வி எழுகின்றது.

இப்படிப்பட்ட ஸூக்திவிந்யாஸம் நம் பாஷ்யகாரரிடத்தில் தவிர இதரர்களிடத்தில் காணக்கிடைக்காது. ஸ்வாமி ஆழ்வாரருளிச் செயலை அடியொற்றியே இந்த விசேஷண மிட்டருளினார். எங்ஙனேயென்னில்: ஆழ்வார் திருவாய்மொழியில் (1-3-2). *எளிவருமியல்வினன்* என்கிற பாட்டில் "ஒளி வருமுழுநலம் முதலில கேடில" என்று அபரிமிதகல்யாணகுணமுடைமையைச்சொல்லி, உடனே "வீடாந் தெளிதரு நிலைமையது ஒழிவிலன்" என்கிறார். மோக்ஷமாகிற தெளிந்த நிலத்தைத் தருவதான அந்த ஸ்வபாவத்தை அதாவது மோக்ஷப்ரதத்வத்தை எப்போதும் முடையவன் என்பது இதன் பொருள். இங்கே நம் ஆசார்யர்கள், *ஒளிவருமுழுநலம்* என்றதிலேயே மோக்ஷப்ரதத்வமாகிற இந்த குணமும் அடங்காதோ ? என்று கேட்டுக்கொண்டு "மோக்ஷப்ரதத்வம் தனியே சொல்லவேண்டுவதொரு குணமாகையாலே சொல்லுகிறார்" என்றருளிச்செய்கிறார்கள். இப்படி மோக்ஷப்ரதத்வத்தைத் தனிப்பட அருளிச் செய்தவர் நம்மாழ்வாரேயாவர். இங்கே யருளிச் செய்வது தவிரவும் இரண்டாம்பத்தில் *அணைவதரவணைமேல்* என்கிற திருவாய்மொழியாலும் மோக்ஷ ப்ரதத்வத்தை விசேஷிக்க அருளிச்செய்கிறார். தேசிகனும் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் ஸாரத்திலும் அந்தத் திருவாய்மொழிக்கு மோக்ஷப்ரதத்வமே அநுபாவ்யகுணமென்று அறுதியிடுகிறார். ஆக இங்ஙனே மோக்ஷப்ரதத்வத்தை ஆழ்வார் தனிப்பட அருளிச் செய்திருப்பது கொண்டே ஸ்வாமி ராமாநுஜரும் *விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்பதனால் இதைத் தனிப்பட அருளிச்செய்தார்.

இதற்குமேல் மூன்றாவது பாதத்தில் 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச் செய்ததிலும் விசேஷித்து அவதானம் செல்லவேண்டும். *அகிலபுவநேத்யாதியான இந்த ச்லோகத்தில் பாஷ்யத்திற்கு மூலமான சாரீரகமீமாம்ஸையின் சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹம் செய்யப்படுகிறதென்பது முக்கியமான விஷயம். இந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு ஸூத்திரத்திலும் லக்ஷ்மீஸம்பந்தம் ப்ரஸ்தாவிக்கப்படவுமில்லை; அப்படியிருக்க ஸ்வாமி எதுகொண்டு 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச் செய்தாரென்று விமர்சிக்கவேணும். ஆழ்வார்கள் கோஷ்டியில் 'திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு* [ஸ்ரீஸம்பந்தமில்லாத தெய்வத்தைத் தெய்வமாக நினைககவேண்டா] என்கிற உத்கோஷமிருப்பதனாலே அதை யாதரித்தே ஸ்வாமி இங்கு 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச்செய்தது.

இதற்குமேல் நாலாவது பாதத்தில் "பக்திரூபா சேமுஷீ பவது" என்றதும் அவதேயம். 'மம பக்திர் பவது, மம பக்திரஸ்து' என்றருளிச் செய்தால் போதுமே 'பக்திரூபா சேமுஷீ பவது' என்றது ஏன் ? என்று ஆராயவேணும். திருவாய்மொழி முதற்பாசுரத்தில் "மதிநலமருளினன்" என்று ஆழ்வார் பாசுரமுள்ளது. மதியாவது ஞானம்; நலமாவது பக்தி. ஞானமும் பக்தியுமாகிற இரண்டையும் தந்தான் என்று சிலர் நிர்வஹித்தார்கள். நலமான மதியைத் தந்தானென்று கொண்டு, முளைக்கும்போதே வயிரம் பற்றி முளைக்கும் பதார்த்தம்போலே பக்திரூபா

பந்தமான ஞானத்தைத் தந்தானென்பதே முக்கியமான நிர்வாஹமாகக் காட்டப்படுகிறது. எம்பெருமானார் இவ்விதமான அர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றியே "பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திருபா" என்றருளிச் செய்தாரென்பதே இங்கு தத்லையான விஷயம். "புத்திர்மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி:" என்பது அமரகோசம். மதியும் சேமுஷியும் பர்யாயமே. பக்தியும் நலமும் பர்யாயமே. ஆழ்வார்க்கு மதிநலமருளினது போல அடியேனுக்கும் மதிநலமருள வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று.

சாரீரகமீமாம்ஸையின் முதல் ஸூத்ரம் *அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா* என்பது. இதில் ப்ரஹ்ம சப்தத்திற்கு சங்கராசாரியர் பாஷ்யம் "ப்ரஹ்ம ச வக்ஷ்யமாண லக்ஷணம் ஜந்மாத்யஸ்ய யத இதி" என்றிவ்வளவே யுள்ளது. ஸ்வாமி பாஷ்ய ஸூக்தியோ வென்னில் "ப்ரஹ்ம சப்தேந ஸ்வபாவதோ நிரஸ்த நிகிலதோஷ: அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணகண: புருஷோத்தம: அபிதீயதே" என்றுள்ளது. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும் போதே உயர்வறவுயர் நலமுடையவன் என்றருளிச்செய்த சந்தையையே ஸ்வாமி நேராக மொழிபெயர்த்திருக்கிறார். உயர்வற—அநவதிகாதிசய, உயர்—அஸங்க்யேய, நலமுடை—யவன்—கல்யாணகுணகண:, யவனவன்—புருஷோத்தம: ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் முழுவதும் பகவத்குணமயமே யாதலால் அந்த அம்ருத ஸாகரத்திலே யூறின ஸ்ரீராமாநுஜர் அதற்குத் தகுந்தபடியே அருளிச் செய்கிறார். தமிழில், மால் என்றும் நெடுமால் என்றுமுள்ள சொற்களுக் குண்டான அர்த்தங்களை ப்ரஹ்மசப்தார்த்தமாக ஸ்வாமி உபபாதிக்கும் பரிசு அத்யாச்சர்யம்.

## 5 அநந்தகுணஸாகரஸூக்தியும் ஆழ்வாரருளிச்செயலும்

ஸ்வாமி, ஸ்ரீ பாஷ்யம் முதலான திவ்ய க்ரந்தங்களில் எம்பெருமானுக்கு இட்டருளும் விசேஷணங்களில் *அநந்தகுணஸாகரம்* என்றும்* அபரிமிதோதாரகுணஸாகரம்* என்றும் விசேஷணமருளிச் செய்யக் காண்கிறோம். குறிப்பாக ஓரிட மெடுத்துக் காட்டுகிறோம்—இரண்டாமத்யாயத்தின் தொடக்கத்தில் ஸ்ரீ பாஷ்யத்தில் *அபரிமிதோதார குணஸாகரம் பரம் ப்ரஹ்ம வேதாந்த வேத்ய மித்யுக்தம்* என்றுள்ளது. இங்கு பரப்ரஹ்மசப்தம் ப்ரதமாவி பக்தியே யொழிய த்விதீயாவிபக்தியன்று. இதற்கு விசேஷணமான அபரிமிதோதாரகுண ஸாகரம் என்பதும் ப்ரதமாந்தமாகவே கொள்ளப்படவேண்டியதாயிற்று. ஸாகர சப்தம் நித்யபும்லிங்கமாகையாலே குணஸாகரோ ப்ரஹ்ம என்று சொல்லத்தகுமே யொழிய குண ஸாகரம் ப்ரஹ்ம என்று சொல்லத்தகாது. எம்பெருமான் திருக்கல்யாண குணங்களுக்குக் கடலாகவுள்ளவனென்று இப்படிப்பட்ட பொருளே ஸ்வரஸமாகத் தோன்றுமாதலால் "குணாநாம் ஸாகர: || என்று தத்புருஷ ஸமாஸம் விவக்ஷிதமாவதற்கே ஔசித்யமுள்ளது. இப்படி ஸமாஸம் கொண்டால் குணஸாகரம் ப்ரஹ்ம என்கிற இந்த ப்ரயோகம் உபபத்தி யடைவதற்கு வழியே கிடையாது. தத்புருஷ ஸமாஸத்தை விட்டு பஹுவ்ரீஹி ஸமாஸம் கொண்டால் (அதாவது "அநந்த; குணஸாகர: யஸ்ய தத்" என்றும், அபரிமித: உதாரகுணஸாகர: யஸ்ய தத்" என்றும் ஸமாஸம் கொண்டால்.........ஸாகரம் என்று நபும்ஸகலிங்கமாகப் பொருந்தும். ச்ருதப்ரகாசிகா சார்யர் இப்படி பஹுவ்ரீஹி ஸமாஸத்தையே ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கின்றார். எம்பெருமான் குணங்களுக்குக் கடல் போன்றிருப்பவன் என்று எங்கும் எல்லாரும் சொல்லி வருவதும் அநேக க்ரந்தங்களிலுள்ளதுமான இந்த ரீதியைவிட்டு, குணங்களைக் கடலாகச் சொல்லி அக்கடலை எம்பெருமான் உடையவன் என்று இங்ஙனே சொல்லுவதில் என்ன விசேஷம்? என்று சிலர் சங்கிப்பதுண்டு. எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியொன்று தவிர வேறு எந்த க்ரந்தத்திலும் இப்படி பஹுவ்ரீஹி ஸமாஸத்தினால் நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகம் ஓரிடத்தில் கூடக் காணக் கிடைப்பதில்லை. தேடிப் பார்த்தால் ஸ்ரீவைஷ்ணவாசார்யர் களின் க்ரந்தங்களில் கிடைக்குமே யொழிய மற்றையோருடைய க்ரந்தங்களில் அடியோடு கிடைக்கமாட்டாதென்று உறுதியாகக் கூறலாம்.

இப்படி விலக்ஷணமாக ஸ்வாமி அருளிச் செய்ததற்கு ப்ரபலமான மூலமுண்டு: *தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்* என்கிறபடியே ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளை வளர்ப்பதற்கே அவதரித்த வரான நம் பாஷ்யகாரர் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளைத் தழுவியே அருளிச் செய்பவர் என்பதை நாம் பல சான்றுகள் காட்டி நிரூபித்திருக்கிறோமே; ப்ரக்ருதஸ்தலமும் அதில் தலையான சான்று. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (69) * மிகுந் திருமால் சீர்க்கடலை யுள் பொதிந்த சிந்தனையேன் * என்று அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் குணங்களானவை கடலாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. வண்டமிழ்மாமுனியான அகஸ்த்ய மஹர்ஷி யானவர் உப்புக்கடலை யுட்கொண்டவரென்று ப்ரஸித்தி பெற்றவர்; நம்மாழ்வாரெனும் அருந் தமிழ் மாமுனியான தாம் உப்புக்கடலையுட்கொள்ளாமல் பகவத் குணமாகிய அமுதக்கடலை யுட்கொள்ளப்பெற்றவரென்று காட்டிக் கொண்டபடி. இந்த ஸ்ரீஸூக்தியையே அவலம்பித்து ஆசார்ய ஹ்ருதயத்திலும் (3—6.) மேகாபதேச சூர்ணையில் *பூண்ட நாள் சீர்க்கடலையுட் கொண்டு* என்றருளிச் செய்யப்பட்டது. மேகமானது கருங் கடலை க்ரஹிப்பதுபோல, மேகமாகச் சொல்லப்படுகிற ஆசார்யர்களும் எம்பெருமானுடைய திருக்குணங்களாகிற கடலை க்ரஹிப்பவர்கள் என்றது.

ஆக ஆழ்வார் திருவுள்ளத்தில் பகவத்குணங்கள் கடலாகத் தோன்றினபடியாலே அந்தச் சாயையிலேயே அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமானார் பஹுவ்ரீஹிஸமாஸத்தையிட்டு நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகத்தைச் செய்தருளி குணங்களுக்கு ஸாகரத்வத்தை நிலைநாட்டியருளினாராயிற்று. இங்கு வேறு காரணமெதுவும் சொல்லமுடியாது.

## 6 ஸ்ரீபாஷ்யத்திலிருந்து சில நுட்பமான விஷயங்கள்

கீதாசார்யன் தன்னுடைய அவதாரத்திற்கு ப்ரயோஜநம் சொல்லும்போது "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாயச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" என்று ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசநமும் தர்ம ஸம்ஸ்தாபநமுமாக மூன்று ப்ரயோஜனங்களைச் சொல்லி வைத்தான். இந்த ப்ரயோஜனங்களுக்காக எம்பெருமான் இவ்விருள்தருமாஞாலத்தில் துயரில் மலியும் மனிசர் பிறவியில் கண்காணவந்து பிறக்க வேணுமோ? "நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்" என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களைப்பட்டு இந்நிலவுலகில் எம்பெருமான் வந்து அவதரிக்க வேணுமோ? ஸத்யஸங்கல்பனான தான் தன்னுடைய ஸங்கல்பசக்தியைக் கொண்டே எதுவும் செய்யலாமன்றோ? எத்தனை ஸாதுக்களை ரக்ஷிக்க வேணுமானாலும் எத்தனை துஷ்டர்களை சிக்ஷிக்க வேணுமானாலும் தன்னுடைய அவ்யாஹத சக்திகமான ஸங்கல்பத்தினாலே செய்து தலைக்கட்ட என்ன தடை? ஸாதுபரித்ராணத்திற்காகவும் அவ்வப்போதுகளில் நானே வந்து பிறக்கிறேனென்கிறானே, எதற்காகப் பிறக்கவேணும்என்று பிரபலமான ஓர் ஆக்ஷேபம் தோன்றக்கூடியதிங்கு. இதற்கு சங்கர பாஷ்யத்தில் பரிஹாரமொன்றும் கிடையாது. மத்வ பாஷ்யத்தில் மூலத்திற்கு ஸம்பந்தமின்றிக்கே ஏதோ எழுதப்பட்டுள்ளது; அதாவது, பகவான் ஸாதுபரித்ராணாதிகளை அவதரித்தே செய்யவேணுமென்கிற நிர்பந்தமில்லை; ஆனாலும் விளையாட்டாக அவதரிக்கிறான். ப்ரஹ்மஸூத்ரத்திலும் "லோகவத்து லீலா கைவல்யம்" என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ' என்பது மத்வ பாஷ்ய பங்க்தியின் பொருள். ஸாதுபரித்ராணாதிகளுக்காக நான் வந்து பிறக்கிறேனென்று மூலத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, அதற்குக் கண்டனம் செய்கிற முறையில் இந்த பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. "லோகவத்து லீலா கைவல்யம்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமானது பகவான் செய்கிற ஜகத்ஸ்ருஷ்டியைப் பற்றினதேயொழிய பகவதவதாரத்தைப் பற்றியதன்று என்பது நிர்விவாதம். அதை இங்கெடுத்தெழுவது ஸூத்ராம் அப்ரஸக்தம். அது கிடக்கட்டும். நம் ஸ்வாமியின் பாஷ்யத்திலுள்ள இன்சுவைப்

பொருள்களை யநுபவிப்போம். அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் "அந்தஸ் தத்தர்மோபதேசாத் (1-1-21,) என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 'பரித்ராணாய ஸாதூநாம்' என்ற ச்லோகத்தை ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக வுதாஹரித்து அங்கு அருளிச் செய்திருப்பதாவது. ஸாதுபரித் ராணத்திற்காகவே முக்கியமாக அவதாரம் செய்தருளிற்றென்றும், துஷ்டநிரஸனமானது ஸங்கல்பத்தாலுங்கூட ஸாத்யமாகக் கூடியதாதலால் அவதாரத்திற்கு அது ப்ரதாநோத்தேச்யமன்று என்றும் தெரிவிக்கப்படுகிறது. ஸாதுபரித்ராணம் மாத்திரம் ஏன் ஸங்கல்பத்தினாலாகக் கூடாது என்று ஒருவர் ஸ்ரீபாஷ்யஸூக்தியின்மேலும் ஆக்ஷேபம் செய்தால் அதற்கு என்ன பரிஹாரம்? மேலும், 'துஷ்க்ருத்விநாசநம் ஸங்கல்ப ஸாத்ய மாகலாம், ஸாதுபரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாக மாட்டாது' என்று ஸ்வாமி துணிந்து ஸாதித்திருப்பது எந்த ஆதாரத்தைக் கொண்டு? என்று ஒருவர் கேட்டால் இதற்கு த்ருப்திகரமான ஸமாதானம் சொல்லவேண்டும். திருவாய்மொழியமுபுதக்கடலில் அவகாஹநமில்லாதவர்கள் மேலே குறித்த கேள்விகளுக்கு விடையிறுக்கமுடியாது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-1-9) "மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்சோதி மறையாதே" என்றொரு பாசுரம் அற்புதமாக அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் மூன்றுமடியில் மழுங்காத ஞானமென்றது எப்பெருமானுடைய ஸங்கல்ப ஞானம், 'எம்பெருமானே! நீ ஸாதுபரித்ராணம் பண்ண வேண்டி நேரேவந்து திருவவதாரம் செய்யாமல் ஸங்கல்பத்தினாலேயே அது பண்ணுவதானால் உனது சோதி குன்றும்; ஸங்கல்பத்தினால் செய்திடாமல் நேரே வந்து அவதாரம் செய்தருளினபடியால் தான் உனது சோதி விளக்கம் பெற்றது' என்று அப்பாசுரத்தின் பின்னடிகளிலருளிச் செய்தாராழ்வார். இதனால் ஸாதுபரித்ராணம் ஸங்கல்பஸாத்யமாகாது என்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. அது ஸங்கல்பஸாத்யமாகாதுதான் என்பதை அப்பாசுரத்திலேயே முன்னிரண்டடிகளில் ஒரு கதை சொல்லுகிற முகத்தால் சிலாகிதம் செய்வித்தாராழ்வார்; "தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே" என்று கஜேந்திராழ்வானுடைய கதையை யெடுத்துக்காட்டித் தம்முடைய விவக்ஷிதத்தை நிலைநாட்டியுள்ளாராழ்வார். கஜேந்திரமோக்ஷகதை யாவருமறிந்ததே; முதலைவாய்க்கோட்பட்ட மதவாரணம் ஆதிமூலமேயென்றழைக்க எம்பெருமான் திருநாட்டிலிருந்து அரைகுலையத் தலைகுலையப் பெரிய திருவடியை மேற்கொண்டு பொய்கைக் கரையேறவந்து யானைக்கு அருள் செய்ததாகக் கதையுள்ளது. திவ்ய தேசங்கள் தோறும் இது பெரிய உத்ஸவமாக இன்றைக்கும் கொண்டாடப்பட்டு வருகிறது. இதைப்பற்றி புத்திமான்கள் சிறிது ஆராயவேண்டும். ஆனைக்கு அருள்செய்யத் திருவுள்ளமானால் பரமபதத்திலிருந்து பொய்கைக் கரைக்கு ஓடிவந்துதான் அருள் செய்யவேணுமோ? இடத்தைவிட்டுப் பெயராமலே இரண்டுபடியாக அருள் செய்திருக்கலாமே. (அதாவது)

"விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஸ் ஸஞ்ஜஹ்ருஷ:" (ஸ்ரீவைகுண்டஸ்தவே) என்று ஆழ்வானருளிச் செய்தபடி ஸகலப்ர பஞ்சங்களினுடையவும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களையெல்லாம் அவலீலையாக நடத்துவதற்குக் கருவியாயிருக்கின்ற ஸங்கல்பம் எங்கே போய்விட்டது? கஜேந்த்ர: ரக்ஷிதோ பவது—'கஜேந்திராழ்வான் ரக்ஷைபெறுக" என்று ஸங்கல்பித்தால் ஆகாததுண்டோ? ஆகாதென்று யாரும் சொல்ல முடியாது. இந்த ஸங்கல்பத்தைக் கொண்டே எளிதாக கஜேந்திரரக்ஷணம் செய்திருக்கலாமே. இது தவிர மற்றொரு ப்ரகாரமுண்டு; அதாவது, *விடுத்த திசைக் கருமம் திருத்தவல்ல திருவாழியாழ்வான் கைங்கரியத்திற்கு ஸஜ்ஜனாயிரா நின்றான்; *கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்* (திருவாய்மொழி 10-6-8) என்கிறபடியே இன்னதிக்கில் இன்ன காரியமாகவேணுமென்று நினைத்தமாத்திரத்திலே அதை நிறைவேற்றவல்லவனவன். "கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே ஆழிவிடுத்து அவருடைய கருவழித்தவழிப்பபன்" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி பாதாளலோகத்

திலுஞ்சென்று இறைப்பொழுதில் அரிய பெரிய காரியம் செய்துவந்த அந்த ஸுதர்சநாழ்வானுக்கு அஸாத்ய மானதுண்டோ? மேலும், பரமபதத்திலிருந்து பொய்கைக்கரைக்கு வந்துவாங்கூட "க்ராஹம் சக்ரேண மாதவ:" "கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப் படையுடையான்" "தட்டத்துக் கோள்முதலை துஞ்சக்குறித்தெறிந்த சக்கரத்தான்" என்கிறபடியே அந்த ஸுதர்சநாழ்வானை யிட்டுத் தானே காரியம் செய்தது; பொய்கைக்கரையளவு மெழுந்தருளித் தான் அவனுக்கு நியமிக்க வேணுமோ? பரமபதத்திலிருந்தே நியமித்தாலாகாதோ? நியமிக்கத்தான் வேணுமோ? கருத்தறிந்து காரியம் செய்ய வல்லனே அவன்; ஆக, அப்ரதிஹத சக்திகமான ஸங்கல்பத்தைக் கொண்டும், 'வாணீ பௌராணிகீ யம் ப்ரதயதி மஹிதம் ப்ரேக்ஷணம் கைடபாரே:' [ஸுதர்சநசதகே] என்கிறபடியே ஸங்கல்ப பர்யாயபூதனை திருவாழி யாழ்வானைக் கொண்டும் எளிதாகச் செய்யக்கூடிய கஜேந்த்ர ரக்ஷணத்தை எப்பெருமானே! ஏன் நீ அப்படிச் செய்தருளவில்லை? என்று நம்மாழ்வார் எம்பெருமானைக் கேள்வி கேட்டிருக்கிறார். இப்பாட்டில் இவ்வளவு கேள்வி இருக்கிறதா? என்று ஐயுறவேண்டா; "மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய்!" என்கிற முதலடியினால் - சக்கரத்தாழ்வானையிட்டு ஏன் இந்தக்காரியத்தைச் செய்யவில்லை என்றும், *மழுங்காத ஞானமே படையாக* என்ற மூன்றாமடியினால் ஸங்கல்பத்தைக் கொண்டே ஏன் இந்த காரியத்தைச் செய்துகொள்ளவில்லை? என்றும் கேட்டிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம்.

இக்கேள்விக்கு எம்பெருமான் தவிர வேறு யாராலும் விடை கூற முடியாததாகையாலே அவனே வந்து ஆழ்வாருடைய திருச்செவியிலே, ஆனைக் கருள்செய்ய தான் நேரே ஓடிவந்த காரணத்தை யுரைத்தான்; அது கேட்டு ஸபாஹிதரான ஆழ்வார் எம்பெருமான் தமக்கு ரஹஸ்யமாக வருளிச்செய்த விடையை உலகறிய வெளியிட வேணுமென்றும் ஸ்ரீபாஷ்யத்திலு மேற்ற வேணுமென்றும் திருவுள்ளம்பற்றி அப்பாட்டிலேயே இரண்டாமடியினால் அதனை வெளியிட்டருளினார் [தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே"] என்று. களிறு கஜேந்த்ராழ்வான்; அவனுக்கு 'தொழுங் காதல்' என்று விசேஷண மிட்டதுதான் எம்பெருமானருளிச்செய்த விடையினாலாயது. இங்கே குறிக்கொள்ளத்தக்க விஷய மீது; கஜேந்திரனுக்குத் முதலையைத் துணிக்கவேண்டியதே உத்தேச்யமன்று. அதுவாகில் அது ஸங்கல்பத்தாலோ திருவாழியாழ்வானையிட்டோ செய்யக் கூடியதாகும். அப்போது எம்பெருமானை நோக்கி கஜேந்திராழ்வான் விண்ணப்பம் செய்கிறான் — (அதுஎன்னென்னில்)

"நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பித்தும் தவ" என்று; பெருமானே! இப்பாழுமுடலை முதலை தின்றுவிடுகிறதே யென்று இதற்காக நான் கரைந்திலேன்; கையிற் பறித்தபூக்களை உன் திருவடிவாரத்தில் நேராகப் பணிமாறவேணுமென்று இஃதொன்றையே ஆசைப்பட்டேன்; *உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியும் நீ இதைத் தெரிந்து கொண்டு எழுந்தருளினையே! ஹா! ஹா! உன்னுடைய ஸர்வஜ்ஞதையும் கருணையுமென்னே! என்று கஜேந்திரன் வியந்து உகந்து விஜ்ஞாபித்தது புராண ப்ரஸித்தம்.

"பரித்ராணாய ஸாதூநாம்" என்கிற விடத்தில் இப்படிப்பட்ட தொழுங்காதலையுடையவர்களே ஸாதுசப்த வாச்யர்கள் என்றும், அவர்களுக்குப் பரித்ராணமாவது அவர்கள் கோருகிற படியே நேரேயெழுந்தருளி ஸேவை ஸாதித்தலும் தழுவி முழுசி வார்த்தையாடுதலுந் தானென்றும் நிர்ணயித்து இது ஸங்கல்ப ஸாத்யமாகாதென்று ஸ்வாமி அருளிச் செய்தது பொருத்தமாயிற்று.

## 7 திருவாய்மொழியே வடிவெடுத்த ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம்

சாரீரகமீமாம்ஸா — த்விதீயாத்யாய — த்விதீய பாதத்தில் ஸர்வதாநுபபத்த்யதிகரணத்தில் ஸர்வசூந்யவாதிகளான பௌத்த ஏகதேசிகளின் பக்ஷம் நிரஸிக்கப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜகத்காரண மென்று நன்கு நிலை நாட்டத்தோன்றிய இந்த அத்யாயத்தில் ஸர்வசூந்யத்வ வாதத்தை நிரஸிக்க என்ன ப்ரஸக்தியென்று சிலர் நினைக்கக் கூடும்.

ஜகத்காரண வஸ்து ப்ரதாநமா? பரமாணுவா? பரப்ரஹ்மமா? என்கிற விசாரம் எப்போது பொருந்துமென்னில்; உண்மையில் ஜகதுத்பத்தி யென்பதொன்று நிரூபிக்க முடியுமானால் அப்போது பொருந்தும். அடியோடு இல்லாததொரு பிள்ளைக்கு மாதாபிதாக்களைப்பற்றி விசாரம் செய்வதுண்டோ? ஜகதுத்பத்தியே நிரூபிக்கமுடியாததாயிருக்க, எது ஜகத் காரணம் என்கிற சர்ச்சை ஏதுக்கு? உத்பத்தியானது பாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதா? அபாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதாவென்று கேட்கிறோம். பாவத்திலிருந்து என்பது சேராது; மண்பிண்டத்திலிருந்து பானை முதலியன உண்டாகின்றனவென்றால் மண்பிண்டத்தை உபமர்த்தித்துக் கொண்டுதானே யுண்டாகின்றன. எந்த காரியப்பொருளும் காரணப் பொருளை உபமர்த்தியாமல் உண்டாவதில்லை யென்பதைக் காணா நின்றோம். காரணாகாரத்தின் விநாசந்தானே உபமர்த்தமாவது; அதுதான் அபாவமே. ஆக பாவத்தில் நின்றும் உத்பத்தி யில்லை யென்று தேறிற்று. அபாவத்தில் நின்றுங்கூட உத்பத்தியில்லையென்பது அநாயாஸமாகத் தெரியவரும். அபாவத்திலிருந்து பாவோத்பத்தி ஸம்பவிக்கமாட்டாதன்றோ. ஆக உத்பத்தியே நிரூபிக்க முடியாதிருப்பதால் உத்பத்திக்குப் பிற்பட்டனவான விகாரங்கள் எதுவுமே கிடையாவென்பது ஸித்தம். லோகவ்யவஹாரமெல்லாம் ப்ரம மூலகமே. [இது ஸர்வசூந்ய வாதிகளின் வாதப்ரக்ரியை.]

இப்படி சூந்யமே தான் தத்துவம் = என்பவர்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறார்கள் [ஸர்வதாநுபபத்தேச்ச] என்பது ஸூத்ரம். ப்ரமேயங்களோ ப்ரமாணங்களோ எதுவும் உண்டாகிலுமாம் இல்லையாகிலுமாம்; பூர்வபக்ஷிக்கு அபிமதமான சூந்யத்வம் ஒரு விதத்திலும் தேறாதாகையாலே மாத்யமிகதர்சநமானது அஸமஞ்ஜஸமென்றபடி. 'ஸர்வம் சூந்யம்' என்று சொல்லுபவர்கள் தங்களுக்கு அபிமதமான இவ்வர்த்தத்தை ஸாதித்துத் தரும்படியான ப்ரமாணமொன்று உண்டென்று இசையும் பக்ஷத்தில் ப்ரமாண ஸத்பாவத்தை யிசைந்தபோதே ஸர்வசூந்யவாதம் தொலைந்தது. ப்ரமாணமில்லையென்னும் பக்ஷத்தில், ப்ரமாணமில்லாமையினாலேயே தங்களுக்கு அபிமதமான அர்த்தம் அஸித்தமென்று முடிந்தது. மேலும் 'ஸர்வம் சூந்யம்' என்கிற விந்த வார்த்தையினால் நாஸ்தித்வந்தானே விவக்ஷிதமாகவேணும். ஒரு ரூபத்தை விட்டு மற்றொரு ரூபத்தையடைவதே நாஸ்தி பதார்த்தமாகையாலே ரூபாந்தரத்தாலே அஸ்தித்வமே சொல்லப் பட்டதாக முடிகிறது. மண்ணுண்டையொன்று இருந்தது. பானை தோன்றும்போது அந்த ம்ருத்பிண்டம் நசிக்கிறது அது நசித்தவளவிலே 'ம்ருத்பிண்டோ நாஸ்தி' என்று சொல்லுகிறான். இந்த வ்யவஹாரத்தில் பானையென்கிற அவஸ்தைதானே விஷயமாகிறது.

உலகில் அஸ்தி நாஸ்தித்வங்களை வழங்குகிறவர்கள் 'இப்போது மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டையில்லை; இங்கு மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டையில்லை? என்றிப்படி இடத்தையும் காலத்தையும் உட்படுத்தியே வ்யவஹரிக்கிறார்கள்: தேசகாலங்களைச் சேர்க்காமல் வெறுமனே 'மண்ணுண்டையில்லை' என்கிற ப்ரதீதியோ வ்யவஹாரமோ எங்கும் காண்பதில்லை. 'இப்போது ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ ஒருவன் வ்யவஹரித்தால் மண் என்னும் த்ரவ்யத்திற்கு பிண்டத்வாவஸ்தை விஷயம். 'இப்போது ம்ருத்பிண்டமில்லை' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமில்லை' என்றோ வ்யவஹரித்தால் பிண்டத்வாவஸ்தையின் நாசமாகிய கடத்வாவஸ்தை விஷயம். ஆக நாஸ்தித்வவ்யவஹாரம் பண்ணினாலுங்கூட வேறொரு ஆகாரத்தாலே அஸ்தித்வமே தேறிநிற்கிறதென்பதை ஸர்வாநுபவஸாக்ஷிகமாகக் காணலாம். இன்ன வஸ்து இங்கில்லை என்றால் மற்றோரிடத்திலுள்ளதாகத் தேறியே தீரும். இப்போதில்லையென்றாலும் மற்றொருபோதில் உண்டென்றதாகத் தேறியேவிடும். ஆகவே ஒருபடியாலும் ஸர்வசூந்யவாதம் ஸித்தியாது என்றதாயிற்று. ஸூத்ரத்தின்மேலே பொருள் காண்பது எங்ஙனே யென்னில்; ஸர்வதா — ஸர்வப்ரகாரத்தாலும், அநுபபத்தே: — ஸ்வாபிமதமான ஸர்வசூந்யவாதம் உபபந்நமாகாமையினாலே என்றபடி 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதை ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி விவரித்தருளும்போது "ஸதிதி ப்ரதிஜ்ஞாயாம் அஸதிதி ப்ரதிஜ்ஞாயாஞ் ச" என்றருளிச்

செய்கிறார். ஸ்வாமிக்கு இப்பொருள் தோன்றினது எதனாலென்னில்; திருவாய்மொழியில் (1—1—9) *உளனெனிலுளன் அவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள், உளனென விலனெனவிவைகுண முடைமையின், உளனிருதகைமையொ டொழிவிலன் பரந்தே* என்ற பாசுரங்கொண்டே இந்த ஸூத்ரத்தின் பொருளை ஸ்வாமி அறுதியிட்டருளினாரென்பது நிஸ்ஸந்தேஹம். அப்பாசுரத்தின் ஆரும்பிரப்படியை ஸேவித்தால் இஃது எளிதிற் புலனாகும். அப்பாட்டிற்குத் தமிழ் மொழியாலெழுதப்பட்டுள்ள பொருள்தான் ஸ்ரீபாஷ்யத்தில் வடமொழியாலெழுதப்பட்டுள்ளதென்பதை விசதமாக நிரூபித்துக்காட்டுகிறேன் காண்மின் ;

## திருவாய்மொழி ஸூக்தி

(1) உளனெனில் உளன் ;
அவனுருவம் இவ்வுருவுகள் ;

(2) உளனலனெனில் உளன் ;
அவனருவ மிவ்வருவுகள் ;
இருதகைமையோடு உளன்.

## ஸ்ரீபாஷ்ய ஸூக்தி

(1) கிம் பவாந் ஸர்வம் ஸதிதி ப்ரதிஜாநீதே ? (ததாஸதி) தவாபிப்ரேதம் துச்சத்வம் ந ஸம்பவதி ;

(2) கிம்பவாந் அஸதிதிப்ரதி ஜாநீதே ? (ததாபி) துச்சத்வம் ந ஸம்பவதி. சூந்யமிதி ப்ரதிஜாநதா ஸதிதி ப்ரதி ஜாநதேவ ஸர்வஸ்ய வித்யமாநஸ்ய அவஸ்த்தாவிசேஷ யோகிதைவ ப்ரதி ஜ்ஞாதா பவதீதி துச்சதா ந குதச்சிதபி ஸித்யதி !!



## 8 ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்தி வைலக்ஷண்யம்

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீபாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும் படியான ஒரு அதிசயம் அடியேனுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் காணமுடியாது. அஃது என்னென்னில், மூலத்தில் பரம புருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில் ஆழ்வார்களுடைய திவ்யஸூக்திச் சாயையிலே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப் பெருமைகளை விளக்கிப் பல விசேஷணங்களை அருளிச் செய்தாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. ஸ்ரீபாஷ்யத்திலும் ஓரிடம் காட்டு கிறேன். அதில் கடைசியான ஸூத்திரம் [அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்] என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபதத்தைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பி வருவது உண்டா இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநராவ்ருத்திகிடையா தென்று சாஸ்தரம் சொல்லி யிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவேஸூத்ரம் சொல்லி நின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமி யெம்பெருமானார். 'பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்கட்குப் புநராவ்ருத்தியில்லை யென்றும் தெரிவிக்கின்றது" என்றருளிச் செய்கிறார். இங்கு ' யதாபரமபுருஷ: அஸ்தீதி சப்தாத்அவகம்யதே............" என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது; ஆயினும் ஸ்வாமி இங்கே அருளிச் செய்வது பாரீர் ;—

"யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதி காரணம் ஸமஸ்தவஸ்து விலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதி: நிரஸ்த ஸமாப்யதிக ஸம்பாவந: பரமகாருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷ:............" என்று இவ்வளவு விசேஷணங்களையருளிச்செய்கிறார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் 'மந்மநா பவ மத்பக்த:' என்பது; இதில் மந்மநா பவ என்பதற்கு என்னிடத்தில் மனத்தை

வைத்திடு என்று பொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே, எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவேயில்லை. சங்கராசாரியர் "மயி வாஸுதேவே மந: யஸ்ய ஸ: த்வம் மந்மநாபவ" என்று உரைத்தார். என்னிடத்தில் என்பதற்கு வாஸுதேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித்தாராயிற்று. இனி ஸ்வாமியின் பாஷ்யத்தையெடுத்துக் கொள்வோம்: அவ்விடத்துப் பங்க்திகளை ஸேவித்தால் கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்.

"மந்மநா பவ—ஸர்வேச்வரே நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகில ஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீக தலாமலாயதேக்ஷணே ஸ்வச்ச நீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ர ஸத்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீட மகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபார காருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்ய காம்பீர்யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ அநாலோசித விசேஷாசேஷலோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ" என்கிற இவ்வளவும் அதிகம்பீரமான ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாகும்.

இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள் பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோவென்று சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச் செய்தாரென்று ஆலோசிக்க வேண்டும். ஸ்வாமியெம்பெருமானார் 'பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்' என்றும் 'கலிமிக்க செந்நெற்கழனிக்குறையல் கலைப்பெருமானொலி மிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயம் ராமானுசன்' என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச் செய்த படியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பலனாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்யப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் எம்பெருமான் தன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக் காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும். அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குணபௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றையெடுத்துரைத்து இவற்றிலேயீடுபடும்படி சொல்லுவதாகவன்றோவுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்யப்ரபந்தஜ்ஞான ஸம்பத்து சிறிதுமில்லாமையினாலே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில் கூட எழுதி வைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பல பலவிடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்விந்யாஸம் பண்ணத் தெரியாமலில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக் காண்கிறிலோம். 'செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே' என்றும் 'கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே' என்றும் 'செக்க மலர்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலை போலுந் திருமேனி யடிகளுக்கே' என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஆழங்காற்பட்டிருக்கு மாசிரியர்களுக்கே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்க்கின்றது.

## 9 திருப்பாவையையநுஸரித்த கீதாபாஷ்யம்

கீதை (3–21) "யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜந:. ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே" என்னும் ச்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பைத் தெரிவிப்பது.

